KALKI
29.4.2007 ரூ.8.00
80 பக்கங்கள்

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

+16

ணைப்பைக் கேட்டு வாங்குங்கள்

ழகு...ஆரோக்யம்...

ளம்!

லாம் உண்டு இயற்கை வழியில்!

## "விருதுகள் கொடுக்கப்படுவதில்லை... வாங்கப்படுகின்றன!"

– வெடிக்கிறார் சேரன்

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

29.4.2007
இதழ்...





கல்கி
தரம் நிரந்தரம்

+16

# தானியங்கி மருத்துவம்

## மாற்று சிகிச்சை மகிமை!



இணைந்து வழங்குவோர்:




Indian Celltheraphy Institute

பணத்தின் மீது ஆசையில்லாதவர்களை விரல்விட்டு எண்ணிவிடலாம். சேர்த்து வைத்த பணத்தை எதில் முதலீடு செய்யலாம், அதனை எப்படி இரட்டிப் பாகத் திருப்பி எடுக்கலாம் என்கிற சிந்தனைதான் இன்றைய தலைமுறைக்கு. அவர்களுக்குப் பங்குச்சந்தை சரியான தீனி'' என்கிறார் சோம.வள்ளியப்பன். இவர் பங்குச்சந்தை ஆலோசகராக தமிழகம் அறிந்த பிரபலம். பங்குச் சந்தையில் பணத்தை முதலீடு செய்வது எப்படி, என்பதில் ஆரம்பித்து சகலமும் விளக்குகிறார் வள்ளியப்பன்...



# பங்குச் சந்தையில் முதலீடு செய்வது எப்படி?

"பங்குச் சந்தையில் முதலீடு செய்ய வேண்டுமென்றால் ஆங்கில அறிவும், நிறையப் பணமும் தேவை என்கிற நினைப்பு முற்றிலும் தவறானது. அதே போல் சுலபமாக, ரொம்பச் சீக்கிரமாக பங்குச் சந்தையில் பணம் பண்ணலாம் என்கிற தவறான கருத்தும் எல்லோர் மனங்களிலும் ஆழமாகப் பதிந்திருக்கிறது. உண்மையோ இதற்கு நேர்மாறானது.

பங்குச் சந்தையில் முதலீடு செய்ய நினைப்பவர்கள் முதலில் தங்களுக்கென்று ஒரு வங்கிக் கணக்கை வைத்திருக்க வேண்டும். ஒரு தனி நபரால் எந்த ஒரு நிறுவனத்தின் பங்குகளையும் நேரடியாக வாங்கவோ, விற்கவோ முடியாது. இதற்கென லைசன்ஸ் பெற்ற பங்குத் தரகர்கள் உள்ளார்கள். அவர்களை நாடினால் எந்த நிறுவனத்தின் பங்குகள் என்ன விலைக்குப் போகின்றன என்பதைத் தெளிவாகக் கூறி புரிய வைப்பார்கள். ஆனால், எந்த நிறுவனத்தின் பங்குகளில் முதலீடு செய்ய வேண்டும் என்பதை முதலீடு செய்பவர்தான் முடிவு செய்ய வேண்டும்.

மும்பைப் பங்குச் சந்தையில் (BSE) 'ஏ' கிரேட் நிறுவனங்கள் என்று முப்பது நிறுவனங்களைத் தெரிவு செய்துள்ளார்கள். தேசிய பங்குச் சந்தை(NSE) ஐம்பது நிறுவனங்களை 'ஏ' கிரேட் நிறுவனங்கள் என்று முடிவு செய்துள்ளது. இவற்றில் முதலீடு செய்வது எப்போதும் பாதுகாப்பானது.

பங்குச்சந்தையில் முதலீடு செய்வதன் சிறப்பு, நீங்கள் நினைத்த நேரத்தில் பங்குகளை விற்றுப் பணம் பார்க்கலாம்; ஆனால், இது நிலம், நகை, வீடு போன்ற முதலீடுகளில் சாத்தியமில்லாதது. இரண்டாவது சிறப்பு, ஒரு நிறுவனத்தில் ஒரு பங்கை வைத்திருப்பவரையும் ஆயிரம் பங்கை வைத்திருப்பவரையும் சரிசமமாக நினைத்து இருவருக்குமே ஆண்டறிக்கையை அந்நிறுவனம் அனுப்பும்.



பங்குச் சந்தை திங்கள் கிழமையிலிருந்து வெள்ளிக்கிழமை வரை செயல்படும். அப்போது பங்குகளை வாங்கவோ, விற்கவோ முடியும். முதன் முதலாக முதலீடு செய்யும் நபர், விவரம் தெரிந்தவர்களின் உதவியோடு அணுகுவது நல்லது.

சரி, முதலீடு செய்ததை எப்போது திருப்பி எடுப்பது?

நீங்கள் வாங்கின பங்கு 15 - 20 சதவிகிதம் வரை இலாபம் தரக் கூடியதாக இருக்கும்போது உங்கள் பங்கை விற்பதுதான் புத்திசாலித்தன மான முடிவாகும். உங்கள் பங்கை மொத்தமாக வாங்காதீர்கள். நீங்கள் பங்குச் சந்தையில் முதலீடு செய்ய வைத்துள்ள பணத்தைப் பகுதிப் பகுதி யாகப் பிரித்து முதலீடு செய்யுங்கள்.

இந்த இரண்டு வழிமுறைகளையும் முயன்று பாருங்கள்... பணம் உங்கள் பாக்கெட்டை நிரப்பும்!

- சுகந்தி ஜி.பாரதி

படம்: பொள்ளாச்சி சுந்தரம்




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர் :
லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
எக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

தலைமை உதவி ஆசிரியர் :
மு.மாறன்

வடிவமைப்பு :
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,
ச.கார்த்திகேயன்

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.



# “மாஸ் ஹீரோக்களின் மார்க்கெட் வேல்யூவை மட்டுமே பிரதானமாக வைத்துப் பணம் பண்ணும் ஆசையில்லை!”

‘எனக்கு அடுத்தபடி கிராமத்தை கிராமமாகவே காட்டியவன் நீதான்’ என்று பாரதிராஜாவாலேயே பாராட்டப்பட்டவர் சேரன். கிராமத்தை விட்டு விலகி ‘மாயக் கண்ணாடி’ அணிந்துகொண்டு உலகம் பார்க்கப் புறப்பட்டவரை நிறுத்திப் பேசினோம்.

**மாயக் கண்ணாடிக்கான ஸ்பார்க் உங்களுக்குள் எப்படி...?**

''தவமாய் தவமிருந்து படம் ரிலீசுக்குப் பிறகு ஆலப்புழையில் இயற்கையோடு இயற்கையாக இருந்தபோது, என் மனதுக்குள்ளேயே ‘ஆட்டோகிராஃப்’ ஓட்டினேன். அப்போதுதான் ஒரு விஷயம் புரிந்தது. என் அம்மா, அப்பா என்னை கவர்ன்மென்ட் வேலைக்கு அனுப்பி, சீக்கிரம் கல்யாணம், குழந்தை என்று செட்டிலாக வேண்டும் என்று ஆசைப்பட்டார்கள்; நான் நடிகனாக ஆசைப்பட்டேன். காலம் என்னை நடிகனாக்கியது. சரியான நேரத்தில், சரியான முடிவு எடுத்திருக்காவிட்டால் இன்று நான் என்ன நிலைமையில்... இருந்திருப்பேனோ தெரியவில்லை. இதை மையமாக வைத்துத்தான் மாயக் கண்ணாடியை உருவாக்கினேன். நம் இளைஞர்கள் கனவு உலகத்திலேயே இருக்கிறார்கள். வசதியாக - ஆடம்பரமாக வாழ்பவர்களைப் பார்த்து அதேபோல் தானும் வாழ ஆசைப்படுகிறார்கள். ஆனால், அதற்காக என்ன முயற்சிகளைச் செய்கிறார்கள், எப்படிச் செய்கிறார்கள் என்பதைத்தான் ‘மாயக் கண்ணாடி’யில் சொல்லி இருக்கிறேன்.''

**இயக்குநரான பின்பும் நடிப்பாசை உங்களை விடவில்லையே...?**

''உண்மையைச் சொல்லப்போனால்

நான் கேமராவுக்குப் பின்னால் நின்ற போது, அதன் முன்னால் நடிகனாக நிற்கவேண்டும் என்ற ஆசையே போய் விட்டது.

கோடம்பாக்கத்துக்கு வண்டியேறி வந்தது 'நடிகனாக வேண்டும்' என்கிற வெறியோடுதான். ஆனால் நடிகனாக முடியவில்லை. இப்படியே போனால் என்ன ஆகும் என்று ஒரு நிமிடம் நிதான மாக யோசித்தபோதுதான், 'நடிகனாவ தற்கு நம்மிடம் ஏதோ குறையுள்ளது. இந்த ஆசையோடு வாழ்நாளை வீணாக்கிக் கொண்டிருக்காமல் வேறு ஏதாவது உருப்படியாகச் செய்ய வேண்டும்' என்று சரியான சமயத்தில் முடிவு எடுத்து இயக்குநராக முயற்சி செய்தேன். இயக்குந ராகி வெற்றி பெற்ற பின்பு நடி கனாகலாம் என்று நினைத்தேன். அதற்குச் சரியான உதாரணமாக இயக்குநர் பாண்டியராஜனை என் மனதுக்குள் நினைத்துக் கொண்டேன்.

'ஆட்டோகிராஃப்'-ல் நடிக்கப் பலரிடம் கேட்டபோது யாரும் ஒப்புக் கொள்ளவில்லை. என் கதை, படைப்பு நிராகரிக்கப்பட்டபோது எழுந்த தார்மீகக் கோபம்தான் அந்தப் படத்தில் என்னை நடிக்க வைத்தது. 'தவமாய் தவமிருந்து' படத்தில் கதையின் நாயகன் ராஜ்கிரண் சார்தான். நான் ஒரு துணைப் பாத்திரம். அதனை ஏற்று நடிக்க யாரும் வரமாட் டார்கள் என்பதால்தான் நானே நடித் தேன். 'மாயக் கண்ணாடி'யிலும் இந்தக் கதைதான் நடந்தது.

கதைக்கு நான் பொருத்தமாக இல்லா விட்டால் நடிக்க மாட்டேன். 'டூரிங் டாக் கீஸ்' என்று ஒரு கதை வைத்திருக்கிறேன்; அதன் பாத்திரம் எனக்குப் பொருத்தமாக இல்லாததால் நான் அதில் நடிக்கப் போவதில்லை."

**ஆட்டோகிராஃப், தவமாய் தவ மிருந்து உங்களுக்குக் கொடுத்த மாபெரும் அங்கீகாரம் மாயக் கண் ணாடியில் பயத்தைக் கொடுத்ததா, தன்னம்பிக்கையை அதிகப்படுத்தியதா?**

"ஒவ்வொரு முறையும் கேமராவுக்கு முன்னால் நின்றாலும் பின்னால் நின்றா லும் முதன்முறையாக நிற்கிறேன் என்ற உணர்வோடே நிற்பேன். அந்த உணர்வு தான் என்னை இந்த ரேஸில் நம்பிக்கை யோடு ஓட வைக்கிறது. 'எல்லாருக்கும் கிடைத்துவிடாத பேரும் புகழும் உனக்குக் கிடைத்துள்ளது. ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்; உழைக்க வேண்டும்' என்று அந்த சிரத்தையோடு உழைப்பேன். எனக் குத் தன்னம்பிக்கை அதிகம். ஆனால், வெற்றி பெற தன்னம்பிக்கையோடு இன்னும் சில விஷயங்களும் தேவை.

# "விருதுகள் கொடுக்கப்படுவதில்லை... வாங்கப்படுகின்றன!"

● வெடிக்கிறார் சேரன்

இதைத்தான் மாயக் கண்ணாடி க்ளைமாக் சில் வசனமாக வைத்துள்ளேன். மாஸ் ஹீரோக்களை நம்பும் சினிமாவில், கதையை நம்பும் என்னைப் போன்றவர் களையும் நம்பும் மக்களுக்காக உண்மை யாக உழைத்து, நல்ல கதையைக் கொடுக்க வேண்டும் என்று எப்போதும் ஓடிக் கொண்டிருக்கிறேன்."

**மாஸ் ஹீரோக்களான ரஜினி, கமல், விஜய், சூர்யாவை வைத்து சேரன் பட மெடுக்கவே மாட்டாரா?**

"நம் மாஸ் ஹீரோக்கள் அனைவருமே மணிரத்னம் சார் படத்தில் ஒருமுறையா வது நடிக்க வேண்டும் என்று ஆசைப் படுவார்கள். அப்படி இவர்கள் என் னோடு சேர்ந்து படம் பண்ண விரும் பினால், அதற்கேற்ற ஸ்கிரிப்ட் இருந்தால்



**"பாட்டு என்ற போர்வையில் மனித உணர்வுகளை மலினப்படுத்தும் கவர்ச்சி ஆட்டம் கண்டிப்பாகக் கண்டிக்கப்பட வேண்டிய விஷயம்!"**

நிச்சயம் சேர்ந்து செய்வோம். அதற்காக அவர்களது மார்க்கெட் வேல்யூவை மட்டுமே பிரதானமாக வைத்துப் பணம் பண்ணும் ஆசையில்லை."

**திரையுலகில் பெரிய சாதனைகளைப் புரிந்த பாலசந்தர், பாரதிராஜா, பாக்ய ராஜ் போன்றவர்களின் சகாப்தம் முடிந்துவிட்டதா?**

"அவர்களின் சாதனைகளை 'ஜஸ்ட் லைக் தட்'னு சொல்ல முடியாது. பெரிய ஜாம்பவான்களெல்லாம் இயக்குநர்களாக இருந்தபோது நுழைந்து எவரெஸ்ட்டைத் தொட்டவர் பாலசந்தர். இன்னும் யூத்ஃபுல்லா இருக்கார். நானாபடேகரை வைத்து இந்தியில் படமெடுத்துக் கொண்டிருக்கிறார் பாரதிராஜா. சிறந்த திரைக்கதை என்றாலே பாக்யராஜைவிட வேறு உதாரணத்தைக் காட்ட இன்று வரை வேறு ஆளில்லை. இவர்களின் பாதிப்பும் சாயலும் இல்லாமல் தமிழ் சினிமாவில் இயங்குபவர்கள் குறைவு."

**பாட்டு, சண்டையெல்லாம் சினிமாவுக்குத் தேவையா?**

"பாட்டும் கூத்தும் நம் தமிழ் மண்ணின் அடையாளங்கள். அது இல்லாமல் இருப்பது உப்பில்லாத சாப்பாடு மாதிரி. ஆனால், பாட்டு என்ற போர்வையில் மனித உணர்வுகளை மலினப்படுத்தும் கவர்ச்சி ஆட்டம் கண்டிப்பாகக் கண்டிக்கப்பட வேண்டிய விஷயம்."

**தேசிய விருதுகள் குறித்து...**

"தேசிய விருதுகள் பாரபட்சமாக வழங்கப்படுகின்றன. இங்கே விருதுகள் தானாகக் கொடுக்கப்படுவதில்லை; பெரும்பாலும் வாங்கப்படுகின்றன. நம் ஊரைச் சேர்ந்தவர்கள் சண்டை போட்டு நமக்கு வாங்கித் தர வேண்டியுள்ளது. நான் விருதுகளுக்காகப் படம் எடுப்பதில்லை. மக்கள் அங்கீகாரம்தான் மிகப்பெரிய விருது."

**இன்றைய இளம் இயக்குநர்கள் முதல் முயற்சியிலேயே பெரும் வெற்றியைத் தருகிறார்கள். ஆனால் அது தொடர்வதில்லையே...**

"சின்ன வயதில் இயக்குநராவதில் சாதனை இல்லை. அந்த வயதில் என்ன பெரிய அனுபவம் கிடைக்கும்? நல்ல அனுபவங்களைக் கொண்டு தன்னை உரமேற்றிக் கொள்பவர்களால் மட்டுமே, தன் அனுபவத்தைக் கொண்டு நல்ல விஷயங்களைத் தொடர்ந்து தர முடியும். இல்லையென்றால் இங்கு நீடிக்க முடியாது."

**உங்களுக்குப் பிடித்த - பாதிப்பு ஏற்படுத்திய இயக்குநர்கள்...?**

"சத்யஜித்ரே, கேமரா மூலமாகவே கதை சொல்லும் பாலுமகேந்திரா, பாரதிராஜா, பாக்யராஜ் இவங்கதான் என்னுள் மிக ஆழ்ந்த பாதிப்பை ஏற்படுத்தியவர்கள்."

**மிகப்பெரிய இயக்குநர்கள்கூட தங்கள் படங்களில் ஐட்டம் நம்பர் பாடல், குத்தாட்டம் போன்றவற்றைக் கட்டாயம் வைத்துவிடுகிறார்களே...**

"படத்தின் வெற்றி, தோல்வியை அந்தப் பாடல்கள் நிர்ணயிப்பதில்லை. ஆனால், தங்கள் கதையில் இருக்கும் பலவீனங்களை அவை மூடி மறைக்கும் என நம்புகிறார்கள். அதற்காக மனிதர்களின் பலவீனத்தைத் தீவிரப்படுத்திப் பணம் சம்பாதிக்க முயல்கிறார்கள். இதற்கு மேல் யாரையும் காயப்படுத்த நான் விரும்பவில்லை."

**சந்திப்பு :**
**எஸ்.சந்திரமௌலி**

# புன்னகை மின்னிட...

புன்னகையே நம் தோற்றத்தின் முதல் முகவரி - அன்பு, அழகு, தன்னம்பிக்கை, தைரியம், கம்பீரம் என பல உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் புன்னகை, நமது வெற்றிக்கு முதல் காரணமாக விளங்குகிறது. எனவே ஆண், பெண் அனைவருக்கும் அழகிய புன்னகை அவசியம் தேவை.

**புன்னகையின் வடிவம் (Smile Design) :**

பற்கள் மற்றும் உதடுகளின் அமைப்பைப் பொருத்துத்தான் புன்னகை வடிவம் பெறுகிறது. குறைபாடான பற்கள் மற்றும் உதடுகள் அமைந்தவர்களின் முகத்தோற்றம், புன்னகை மட்டுமின்றி அவர்கள் மனநிலையும் பாதிக்கப்படுகிறது. இவர்கள் பல் சிகிச்சை மூலம் அழகிய புன்னகை பெற முடியும்.

குறைபாடான பற்கள் மற்றும் உதடுகள் உடையவர்களுக்கு அளிக்கப்படும் பல வகையான cosmetic பல் சிகிச்சை முறைகளும் அவற்றின் விளக்கமும்:


• சிகிச்சைக்கு முன்


• சிகிச்சைக்கு பின்

1. உதட்டு பிளவு, அன்னப் பிளவு (cleft lip / cleft palate) போன்ற குறைபாடுகளுடன் பிறக்கும் குழந்தைகளுக்கு, பிறந்த இரண்டு மாதத்தில் இருந்து அறுவை சிகிச்சை ஆரம்பித்து, பல்வேறு கால கட்டங்களில் பல அறுவை சிகிச்சைகள் செய்து, இறுதியாக orthodontic braces பொருத்தி பற்களை வரிசைப்படுத்தி, பேச்சுப் பயிற்சியும் அளிக்கப்படுகிறது.
2. உதடுகளின் அளவில் குறைபாடு உள்ளவர்கள் சிரிக்கும் பொழுது பற்கள் மட்டுமின்றி ஈறுகளும் தெரியும். இதனை "Gummy Smile" எனக் கூறுவர். இதற்கு myofunctional appliance மற்றும் Braces பொறுத்தி சரிசெய்து கொள்ள முடியும்.
3. முன் துருத்திய பற்கள், சந்துகள் உடைய பல்வரிசை என பல முரண்பாடான பற்கள் உடையவர்கள் எந்த வயதினராக இருந்தாலும் fixed appliance என்ற braces பொருத்தி அழகிய பல்வரிசையைப் பெற முடியும். தற்போது, பற்களின் நிறத்தில் (aesthetic braces) ceramic braces உள்ளது.
4. மாறுபட்ட வடிவம், அளவுகொண்ட பற்களுக்கு cosmetic contouring and reshaping மூலம் எளிமையாக ஒரே முறையில் சிகிச்சை பெற முடியும்.
5. உடைந்த பற்கள் உடையவர்களுக்கு, பற்களின் நிறத்திலேயே உள்ள cosmetic restoration எனும் அடைக்கும் பொருள் கொண்டு உடைந்த பற்களுக்கு முழு வடிவம் தர இயலும்.
6. கறை படிந்த பற்கள் Fluorosis stain உள்ளவர்களுக்கு Cosmetic Veneer செய்து பற்களுக்கு லாமினேஷன் போன்று பொருத்தினால் வெண்ணிற பற்களை பெற முடியும்.
7. அடிபட்டு சிறிது காலம் கழித்து ஒரு சில பற்கள் மட்டும் நிறம் மாறி வந்தால், அந்தப் பற்களுக்கு வேர் சிகிச்சை செய்து, ceramic crown எனும் பற்களின் நிறத்தில் உள்ள தொப்பி பொறுத்தி விடலாம்.
8. அடிபட்டு பற்களை இழந்தவர்கள் எடுக்காமல் பொருத்திக் கொள்ளும் ceramic crown & Bridge, (பற்களின் நிறத்தில் உள்ளது). செயற்கைப் பற்களைப் பொருத்திக் கொள்ளலாம். அல்லது அறுவை சிகிச்சைமூலம் Implant பொருத்தி கொள்ளலாம்.
9. இரத்தம் கசிந்த ஈறுகள் மற்றும் கறைபடிந்த பற்கள் உடையவர்களுக்கு வாய்துர்நாற்றம் ஏற்படும். இதைத் தவிர்க்க, மருத்துவரின் ஆலோசனைப்படி, பற்களைச் சுத்தம் செய்து கொண்டு, மவுத் வாஷ் (Mouth Wash) பயன்படுத்த வேண்டும்.
10. மங்கிய நிறமுடைய பற்கள் உடையவர்கள் பிரகாசமான வெண்ணிறப் பற்கள் பெற்று, தங்கள் புன்னகை பளிச்சிட விரும்பினால், Bleaching செய்து கொள்ளலாம்.

SPARKLES (Tooth Jewellery) : ஜொலிக்கும் புன்னகை பெற பற்களில் வைரம் பதித்துக் கொள்ளலாம். (வியக்க வேண்டும் உண்மைதான்.) இன்றைய நவநாகரிக உலகத்தில் Nail Art, Mehandhi, Tattoo போன்று SPARKLES முக்கிய இடம் பிடித்துள்ளது. ஆபரணம், கைக்கடிகாரம், செல்போன் என அலங்கரித்து வந்த வைரக் கற்கள், இன்று நம் பற்களையும் அலங்கரிக்க வந்துள்ளன.



**மேலும் விவரங்களுக்கு:**

**Dr. C.கலைச் செல்வி M.D.S.**
Dental Surgeon & Orthodontist,
AB-11, Second Avenue, Anna Nagar,
Chennai - 600 040. India.
Tel: 91-44-2628 7576, 2628 9801. Mobile : 98408 62898
e-mail:theperfectsmile@rediffmail.com



# அம்மாவின் பாராமுகம்...

நடிகர்; எம்.எல்.ஏ., சமூக ஆர்வலர் என்று பன்முகப் பிரமுகராக இருக்கும் சேகருக்கு இது சோதனைக் காலம். 'கட்சிக் கூட்டங்களுக்கு அவரைக் கூப் பிடக் கூடாது' என்று 'கட்சித் தலைமை அவரை ஓரங்கட்டி விட்டதாக ஒரு தகவல் உலவிக் கொண்டிருக்க, இந்தச் சட்டமன்றத் தொடரிலும் சேகரை தொடர்ச்சி யாகக் காண முடியவில்லை. இந் நிலையில் அவரது மகள் திருமணத் துக்கு ஜெயலலிதா வருவாரா மாட் டாரா என்பதும் இப்போது பட்டி மன்ற விஷயமாகிவிட்டது. உள் வட்டாரத்தில் சேகருக்கு எதிராக என்னதான் நடக்கிறது? மைலாப் பூர் தொகுதியை வலம் வந் தோம்.

"கடந்த 2004-ல் பாராளுமன்றத் தில் அதி.மு.க. படுதோல்வி அடைந் தவுடன் கட்சியில் எந்த எதிர்பார்ப் பும் இன்றி இணைந்தார் சேகர். அதற்கு அவர் சொன்ன இரண்டு காரணங்கள்: ஒன்று ஜெயலலிதா வின் தைரியம்; மற்றொன்று அவருக்கிருக்கும் கடவுள் நம்பிக்கை. 2006 சட்டமன்றத் தேர் தலின்போது மைலாப்பூர் தொகுதியை ஜெய லலிதா மைத்ரேயனுக்குத்தான் தருவார் என்று எதிர்பார்க்கப்பட்ட நிலையில், சேகருக்குக் கொடுத்தார். கடுமையான போட்டியில் சேகரும் வென்றுவிட்டார். அதன்பின்தான் துவங்கியிருக்கின்றன அடுத்தடுத்த சோதனை கள்.

"உடனேயே உள்ளடி வேலைகள் ஆரம்ப மாகிவிட்டன. தொகுதியில் இவருக்கெதிராக பிரமுகர்கள் ஒன்று சேர்ந்தனர். இதற்கு முக்கியக் காரணம், கட்சிப் பிரமுகர்களின் கட்டப் பஞ்சாயத்துகளுக்கு சேகர் உடன்படாததுதான். மேலும் அவர்கள் எப்போதும் சேகரைப் பணம் கேட்டும் நச்சரித்து வந்தனர்" என்றார் மயிலை மூத்த அ.தி.மு.க. தொண்டர் ஒருவர்.

அத்துடன் சீட்டு கிடைக்காத பிரமுகர் ஒருவர், தொகுதியின் பிரமுகர்களைத் தூண்டிவிட, மாவட்ட அளவில் கழகப் பிரமுகர்களும் ஒன்றுபட, சேகருக்கு எதி ராக பெரிய டீம் ஒன்று உருவானதாம்! சேகரைப் பற்றிய புகார்கள் போயஸ் தோட்டத்துக்குப் பறந்திருக்கின்றன. இந்தப் புகார்கள் மிகவும் கவனமாக ஜெ.விடம் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இதற்குக் காரணம் சசிகலா குடும்பத்தினருக்கு சேகர்மீது உண்டான வெறுப்புதான் என்கிறார் கள். ஜெ.வை நேரடியாகத் தொடர்புகொள்ளும் வாய்ப்பைப் பெற்றதால் ஜெ.வைச் சுற்றியிருப் பவர்களின் கடுப்புக்கு ஆளானாராம் சேகர்!

"சசிகலாவின் மீது சேகருக்கு எந்த வெறுப்போ, மதிப்புக் குறைவோ கிடையாது. ஆனால், கட்சியில் சேர்வதற்கு முன்பிருந்தே ஜெயலலிதாவோடு அறிமுகம் ஆனவர் சேகர். எனவே, தோட்டத்துக்குச் சென்றால் அவரைச் சந்தித்துவிட்டு வந்துவிடுவார். தாமாக வலிந்து போய் யாருக்கும் கூழைக் கும்பிடு போட அவர் விரும்புவதில்லை. இதை மரியாதைக் குறைவாகவும், தலைக் கனமாகவும் எடுத்துக் கொண்டுவிட்டனர்

## மைலாப்பூர் தொகுதியில் சேகர் ஜெயித்த உடனேயே அவருக்கெதிராக உள்ளடி வேலைகள் ஆரம்பமாகிவிட்டன!

சிலர்'' என்கிறார் சேகரின் நண்பரான நடிகர்.

இதற்கிடையில் சேகருக்கு மேலும் நெருக்கடி தரும் விதமாக அமைந்துவிட்டது - தயாநிதி மாறனுடன் அவர் ஒரே மேடையில் பங்குபெற்ற சினிமா நிகழ்ச்சி. இதைத் தொடர்ந்து சேகரின் 5000-ஆவது நாடக விழாவில் ஜெ. கலந்து கொள்ளவில்லை. ஆனால், அடுத்த பத்தே நாளில் விழா தொடர்பான மலர் ஒன்றை, தலைமைக் கழகத்தில் வெளியிட்டார் ஜெ. அதனால், சேகரைப் பற்றிய நிலைப்பாடு என்ன என்பது புரியாமல் கட்சிப் பிரமுகர்கள் குழம்பிப் போனார்கள்.

"ரஜினி படத்தைப் போட்டு வோட்டு கேட்டார் என்று இந்தக் கட்சியிலிருந்து ஒருவர் நீக்கப்படுவார். பின்னர் அம்மாவே ரஜினி வீட்டுக் கல்யாணத்துக்குப் போவார். மகாதேவனை நீக்கி விட்டதாகச் சொல்வார்கள். அவர் தலைமைக் கழகத்துக்கு வந்தால் சகல மரியாதை கொடுக்கப்படும். இப்படிப் பல குழப்பங்கள் அங்கு. இந்த நிலையில் வெளிப்படையாக நடந்து கொள்ளும் சேகருக்குச் சங்கடங்கள் வருவது இயல்பே" என்கிறார் தொகுதியின் மூத்த பிரமுகர் ஒருவர்.

இப் பிரச்னைகளைப் பற்றி எஸ்.வி.சேகர் என்ன சொல்கிறார்?

"நீங்கள் சொல்வது போல் எனக்கு எந்த சங்கடமும் இல்லை; சோதனைகளும் இல்லை. தலைமைக்கு என் விசுவாசத்தைப் பற்றி நன்றாகத் தெரியும். மற்றபடி கட்சிக் கூட்டங்களுக்கு அழைத்தால் கண்டிப்பாகச் செல்வேன். அம்மாவின் நம்பிக்கையைக் காப்பாற்றும் வகையில் சிறந்த சட்டமன்ற உறுப்பினர் என்று பெயர் எடுப்பேன். என் மகன் அஸ்வின் சேகர் 'வேகம்' என்ற திரைப் படத்தில் நடிக்கிறார். நான்தான் தயாரிப்பாளர். மேலும் அடுத்த மாதம் என் மகளுக்குத் திருமணம். இந்த வேலைகள் காரணமாக சட்ட மன்றத்துக்குச் செல்ல இயலவில்லை. அதையும் தலைமைக்குக் கடிதம் எழுதித் தெரிவித்துவிட்டேன். திருமணத்துக்குக் கட்டாயம் அம்மா வருவார். என்னைப் புறக்கணிக்கும் வகையில் ஒருபோதும் நடந்து கொள்ள மாட்டார். கடவுள் என் பக்கம் இருக்கிறார்" என்கிறார் எஸ்.வி.சேகர்.

- ப்ரியன்



படம் : ஸ்ரீஹரி

# ...சேகரின் சோதனைக்காலம்?

# சிவாஜி ரஜினியின் இளமை ரகசியம்!

## -கே.வி.ஆனந்த் பேட்டி

• 'சிவாஜி' படப்பிடிப்பில் கே.வி.ஆனந்த்...



'சிவாஜி' படத்துக்கு ஒளிப்பதிவு செய்து, ரஜினியை மிக இளமையாகக் காட்டி ஜாலம் புரிந்திருக்கும் கே.வி.ஆனந்த், தம் அனுபவங்களை நம்முடன் பகிர்ந்துகொள்கிறார்...



"ரஜினியின் 'பாபா', 'சந்திரமுகி' படங்களுக்கு ஒளிப்பதிவு செய்யும் வாய்ப்பு எனக்கு வந்தாலும், வேறு படங்களால் பணியாற்ற முடியாமல் போனது. அது தவிர, ரஜினி படங்களில் பணியாற்றினால் எல்லாக் காட்சிகளையும் ரஜினியை மையமாக வைத்தே அமைக்க வேண்டி இருக்கும். கேமராமேனுக்குப் பெரிய அளவில் சுதந்திரமாக ஒளிப்பதிவு செய்யவோ, அங்கீகாரம் கிடைக்கவோ வாய்ப்பில்லை. இதனாலும் ஒரு தயக்கம். ஆனால், சிவாஜி படத்துக்குக் கூப்பிட்ட போது, ரஜினி, ஷங்கர், ஏவி.எம். காம்பினேஷனில், பிரம்மாண்டமான தயாரிப்பில் பணியாற்றும் அனுபவம் புதிதாக இருக்கும் என்பதால், நான் இயக்கவிருந்த படத்தின் ஸ்கிரிப்ட் வேலையைப் பாதியிலேயே நிறுத்தி சிவாஜிக்கு 'ஓகே' சொன்னேன்.



ஷங்கர், என்னிடம் 'சிவாஜி' படத்தின் கதையைச் சொன்னபோது, அதில் ரஜினி படத்துக்குரிய அம்சங்களும், ஷங்கரின் 'டச்'களும் சரியான கலவையில் இருப்பது கண்டு இம்ப்ரஸ் ஆனேன். பொதுவாக, நடிக, நடிகையர் முகம் காலையில் ஃப்ரெஷ்ஷாக இருக்கும் என்பதால், காலையிலேயே படப்பிடிப்பை ஆரம்பித்துவிட வேண்டும் என நினைப்பேன். ஆனால், பல சந்தர்ப்பங்களில் ஆர்ட்டிஸ்ட்டுகளின் ஒத்துழைப்பு கிடைக்காது. ஆனால், ரஜினி அளித்த ஒத்துழைப்பு அபாரமானது.



படப்பிடிப்பின்போது, ரஜினி

என்னை பிரமிப்பில் ஆழ்த்திய சம்பவங்கள் பல உண்டு. ஷாட்டின்போது உதவி இயக்குநர்களோ, ஒளிப்பதிவு உதவியாளர்களோ கவனக்குறைவாக இருந்து, அவர்களைக் கடிந்து கொண்டால்கூட, உடனே ரஜினி தான் செய்ததில் தவறா என்று அக்கறையுடன் கேட்டு ஒத்துழைப்பார். நாம் 'இல்லை' என்று சொன்னாலும், 'ஏதாவது தப்புன்னா தயங்காமச் சொல்லுங்க! இன்னொரு டேக் போகலாம்' என்பார். அசிஸ்டெண்ட்களிடம் 'ரெடியா?' என்று கேட்டால், உடனே ரஜினி 'ரெடி' என்று எழுந்து வந்துவிடுவார். அதனாலேயே செட்டில் யாரும் உரக்கப் பேசமாட்டார்கள். அமிதாப், ஷாருக்கான், ஐஸ்வர்யா ராய் போன்ற நட்சத்திரங்களுடன் ஓர்க் பண்ணும்போதுகூட நான் இப்படி ஓர் எளிமையைப் பார்த்ததில்லை. ஷங்கர் என்ன சொன்னாலும், மறுபேச்சு பேசாமல் கேட்டுக்கொள்வார்.

**"அமிதாப், ஷாருக்கான், ஐஸ்வர்யாராய் போன்றவர்களுடன் ஓர்க் பண்ணும்போதுகூட இப்படி ஓர் எளிமையை நான் பார்த்ததில்லை!"**



'சிவாஜி'யில் ரஜினியை இளமையாகக் காட்ட வேண்டும் என்று முயற்சி செய்து, அதில் பெரும் வெற்றி பெற்றிருக்கிறார் ஷங்கர். அதற்காக ஒளிப்பதிவாளர் என்ற முறையில், பிரத்யேக லைட்டிங் டெக்னிக்குகளைக் கையாண்டிருக்கிறேன்.

'ஸ்டைல்' என்ற தீமில் எழுதப்பட்ட பாடலை ஸ்பெயினில் படம் பிடித்தோம். ஸ்பெயின், உலகப் புகழ்பெற்ற ஓவியர்களும், கட்டடக்கலை நிபுணர்களும் கொண்ட நாடு. அங்கே கட்டடங்களின் பின்னணியில் எடுக்கப்பட்ட டான்ஸ், சட்டென்று ரசிகர்களின் கவனத்தை ஈர்க்கும். நாங்கள் படம் பிடித்தவற்றை அந் நாட்டு மக்கள் பலர் தங்கள் கேமராவிலும், வீடியோவிலும் படம் பிடித்தார்கள். எங்களால் அதைத் தடுக்க முடியவில்லை.

படத்தில் ஒரு சில நிமிடங்களே வந்தாலும், கதைக்கு மிகவும் அவசியமான காட்சிகள் என்பதால் மூன்று நாட்கள் நியூயார்க் சென்று படமாக்கினோம்.

படம் நன்றாக வர ஷங்கர் செலவு செய்வதற்குத் தயங்கவே மாட்டார். 'சிவாஜி' படத்தில் நிலவு ஒளியில் ஒரு சண்டைக் காட்சி. நாற்பது அடி விட்டமுள்ள ஒரு ஸ்பெஷல் பலூனை அமெரிக்காவிலிருந்து வரவழைத்து, அதற்குள்ளே லைட்டிங் செய்து, ஹீலியம் வாயுவை நிரப்பி, நூற்றைம்பது அடி உயரத்தில் வானில் பறக்கவிட்டு, அந்தக் காட்சி எடுக்கப்பட்ட ஐ.சி.எஃப். மைதானத்தையே நிலவு ஒளியில் மூழ்கச் செய்தார்.

ஷங்கர் மிகவும் குவிந்த சிந்தனை உடையவர். படப்பிடிப்புக்கு வந்துவிட்டார் என்றால், உலகில் வேறு எந்த விஷயம் நடந்தாலும் அது பற்றிக் கவலைப்பட மாட்டார். அவரைப் பற்றிச் சொல்ல வேண்டிய முக்கிய விஷயம் ஒன்று உண்டு. அவரே யோசிக்கிறபோதும், டிஸ்கஷனின்போதும் ஏராளமான ஐடியாக்கள் வந்து கொட்டும். அவற்றில் எதையெதைப் பயன் படுத்திக்கொள்ள வேண்டும் என்பதைவிட, எவை எல்லாம் நமக்கு வேண்டாம் என்பதைத் தெளிவாகச் சிந்தித்து ஒதுக்கி விடுவதில் அவர் கில்லாடி."

சந்திப்பு: **எஸ்.சந்திரமௌலி**

# சபாஷ் இளைஞர்கள்!

"ஒரு பாலிடெக்னிக் மாணவன். எப்போது பார்த்தாலும் அவனுடைய அப்பா, 'நீ உருப்படவே மாட்ட!' என்று அர்ச்சனை செய்துகொண்டே இருக்க, ஒரு கட்டத்தில் அப்பாவின் டார்ச்சர் தாங்க முடியாமல், அந்தப் பையன் தற்கொலை முயற்சியில் இறங்கிவிட்டான். விஷயம் கேள்விப்பட்டதும் நானும் இன்னும் சில நண்பர்களும், ஒரு மனநல மருத்துவர் சகிதம் அவனை மருத்துவமனையில் சென்று பார்த்து ஆறுதல் கூறினோம். அவனுடைய அப்பாவைச் சந்தித்து மகனிடம் பாசிடிவான அணுகுமுறையைக் கையாள வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தினோம். மகன் மனம் தெளிவடைந்து, எதிர்மறையான எண்ணங்களை விட்டொழித்தான். படிப்பை ஒழுங்காக முடித்துவிட்டு, இப்போது நல்ல கம்பெனியில் வேலை பார்க்கிறான்" என்கிறார் செல்வகுமார். வயது 29. இவர் 'இளைஞர் விழிப்புணர்வு இயக்கம்' என்ற பெயரில் ஒரு தன்னார்வத் தொண்டு நிறுவனத்தை ஆரம்பித்து நடத்தி வருகிறார்.



• செல்வகுமார்

"பள்ளியிலோ, கல்லூரியிலோ படிக்கும் ஒரு மாணவனுக்கு நிறைய விஷயம் தெரிந்திருக்கிறது. பரீட்சைகளில் நிறைய மார்க் வாங்கி, அதன் மூலமாக நல்ல வேலையில் கை நிறையச் சம்பளத்தோடு சேர்ந்து விடுகிறார்கள். ஆனால், அதன் பிறகு வாழ்க்கையில் - அது குடும்பத்தில் என்றாலும் சரி, அலுவலகத்தில் என்றாலும் சரி, சிறு பிரச்னை என்றாலும் கூடத் தடுமாறிப் போகிறார்கள். அந்தப் பிரச்னையை எப்படி அணுகுவது என்று தெரியவில்லை. அதற்குத் தீர்வு காண்பதற்குள் திண்டாடிப் போகிறார்கள். இதற்கு என்ன காரணம்? நம் கல்வி முறைதான். அது மாணவர்களை வாழ்க்கைக்குத் தயார்ப்படுத்துவதில்லை. நானும், என்னைப் போன்ற எண்ணம்கொண்ட கார்த்திகேயன், முத்துக்குமார், ரவிசங்கர், முத்துசாமி ஆகிய நான்கு இளைஞர்களும் சேர்ந்து 2001-ஆம் ஆண்டில் 'இளைஞர் விழிப்புணர்வு இயக்கம்' என்ற அமைப்பை ஆரம்பித்தோம். இதன் மூலமாக மூன்று விதமான சேவைகளைச் செய்து வருகிறோம்.

முதலாவதாக, பல்வேறு கல்லூரிகளுக்கும் சென்று மாணவர்களுக்காக சுயமுன்னேற்றப் பயிற்சி வகுப்புகளை நடத்துகிறோம். பிரபல பேச்சாளர்களான சுகிசிவம், தென்கச்சி சுவாமிநாதன், பாரதி பாஸ்கர் போன்றவர்களை அழைத்து, மாணவர்கள் மத்தியில் சொற்பொழிவாற்ற ஏற்பாடு செய்கிறோம். கூடவே, தன்னம்பிக்கையுடன் உழைத்து, வாழ்க்கையில் முன்னேறிய ஆனால், குடத்தில் இட்ட விளக்காக இருக்கும் வெற்றியாளர்களையும் தங்கள் வெற்றி ரகசியங்களைப் பகிர்ந்து கொள்ள வைக்கிறோம். நிகழ்ச்சியின் கடைசியில், வழக்கமான கேள்வி-பதில் நிகழ்ச்சி உண்டு என்றாலும், ஐந்து மாணவர்களைத் தேர்ந்தெடுத்து 'இந்த வெற்றியாளரின் வாழ்க்கையில் இருந்து நீங்கள் கற்றுக்கொண்ட முக்கியமான விஷயம் என்ன?' என்று பேச வாய்ப்பு வழங்குகிறோம். இந்த அணுகுமுறைக்கு மாணவர்கள் மத்தியில் பெரும் வரவேற்பு கிடைக்கிறது.

இன்று மாணவர்கள் மத்தியில் பலருக்குத் தாழ்வு மனப்பான்மை உள்ளது. இதற்குத் 'தாம் கறுப்பு நிறம் என்பதில் ஆரம்பித்து, 'எனக்கு ஆங்கிலத்தில் சரளமாகப் பேச முடியவில்லை' என்பது வரை பலத்தரப்பட்ட காரணங்கள் இருப்பது, அவர்களோடு பேசுகிறபோது தெரிய வருகிறது. எனவே, மாணவர்களுக்குத்




தாழ்வு மனப்பான்மையினைப் போக்கி, தன்னம்பிக்கையூட்டும் விதமான நாங்கள் நடத்தும் நிகழ்ச்சிகள், அவர்களுக்கு மிகவும் உபயோகமாக இருக்கின்றன.

அடுத்து, மாணவர்கள் படிப்பை முடித்தவுடன் வேலைக்குத் தயார் செய்ய உதவும் சில நிகழ்ச்சிகளுக்கும் ஏற்பாடு செய்கிறோம். பல்வேறு தொழில் துறையினரையும் கல்லூரிகளுக்கு அழைத்துச் சென்று, அவர்கள் துறையில் சமீப காலத்தில் என்னென்ன மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன, இன்றைய இளைஞர்களுக்கு அவர்களது துறையில் வேலை வாய்ப்பு எப்படி உள்ளது, அந்த வேலைகளுக்கு மாணவர்கள் தங்களை எப்படித் தயார்படுத்திக்கொள்ள வேண்டும் என்றெல்லாம் விவரமாகப் பேச வைக்கிறோம். இப்படி இதுவரை எலெக்ட்ரிக்கல், எலெக்ட்ரானிக்ஸ், கட்டடக் கலை, மார்க்கெட்டிங், பத்திரிகைத் துறை மற்றும் மீடியா, ஏற்றுமதி - இறக்குமதி, ஓட்டல் நிர்வாகம், ஏரோனாட்டிகல் இன்ஜினியரிங் என்று பல்துறை வல்லுனர்கள் மாணவர்களுக்கு வழிகாட்டி இருக்கிறார்கள்.

எங்களின் இன்னொரு சேவை, மாணவர்களுடைய பிரச்னைகளுக்குத் தக்க ஆலோசனைகள் வழங்குவது. ஆலோசனையுடன் எங்கள் கடமை முடிந்துவிட்டதாக நினைக்காமல், இதற்கென அனுபவம் வாய்ந்த மனநல ஆலோசகர்கள், மனநல மருத்துவர்களிடம் அவர்களை அனுப்பி வைத்து, தேவைப்பட்டால் பெற்றோர்களிடமும் பேசிப் பிரச்னையைத் தீர்த்து வைக்க முயல்கிறோம்" என்கிறார் செல்வகுமார்.

இவர்களின் மூன்றாவது சேவை ரத்த தானம். சுமார் மூன்றாயிரத்து ஐந்நூறு நபர்களின் பெயர், முகவரி, ரத்தப் பிரிவு பற்றிய விவரங்களைச் சேகரித்து வைத்திருக்கிறார்கள். ரத்தம் தேவைப்படும் நோயாளிகளின் நண்பர்கள், உறவினர்கள் இவர்களை அணுகினால், ரத்தத்துக்கு ஏற்பாடு செய்கிறார்கள். ரத்தம் தேவைப்படுவோர், ரத்த தானம் செய்பவர்கள் இரு தரப்பினருக்கும் பாலமாக இருந்து மாதம் நூறு முதல் நூற்றுயிருபது யூனிட் ரத்த தானத்துக்கு ஏற்பாடு செய்கிறார்கள்.

- கௌதம்ராம்



# கல்கி



2007 ஏப்ரல் 29
சர்வஜித் சித்திரை 16
மலர் : 65
இதழ் : 39

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிட்டி
பாப்பா - பாரதியார்.

## குடும்ப சென்டிமென்ட் - குறுக்கு வழி!

**பா**கிஸ்தான் பிளவுபட நேரு குடும்பமே காரணம் என்று சொல்லிக்கொள்வது, இன்றைய சூழலில் பெருமைக்குரிய விஷயமே அல்ல. சம்பந்தப்பட்ட பங்களாதேஷ், பாகிஸ்தான் ஆகிய இரு நாடுகளின் உணர்வுகளையும் உரசிப் பார்த்துச் சவால் விடுகிறது இந்தத் தற்பெருமை! இதன் விளைவுகளைப் பற்றி யோசித்திருந்தால் ராகுல் காந்தி இவ்வாறு பேசியிருக்க மாட்டார். 'நேரு குடும்பம்' சென்டிமென்ட்டையே மீண்டும் மீண்டும் பயன்படுத்தி, குறுக்குவழியில் வாக்கு சேகரிக்க முற்படும் அரசியல் முதிர்ச்சியின்மையின் அறிகுறி இது!

இது போதாதென்று, பிரதமர் வேறு நேரு குடும்ப வாரிசான ராகுல்காந்திதான் காங்கிரஸுடைய நம்பிக்கை நட்சத்திரம் என்றும், அவரன்றி வேறு யாராலும் உ.பி.யை உத்தாரணம் செய்ய முடியாது என்றும் பேசியிருக்கிறார்! தேர்தல் பிரசாரத்தின்போதுதான் மன்மோகன் சிங் பேசினார் என்ற போதிலும், அவருடைய உயர்வுக்கும் கௌரவத்துக்கும் துளியும் பொருத்தமற்ற பேச்சு!

பிரதமராக விளங்குபவர், ஒரு கூட்டணி அரசின் பல்வேறு கட்சிகளைச் சமாளித்து நல்லாட்சி வழங்கி வருவதையும் இதனால், மக்களின் மகிழ்ச்சிக்கும் நம்பிக்கைக்கும் தமது கட்சி பாத்திரமாகி வருவதையும் எடுத்துச் சொல்லி அல்லவா காங்கிரசுக்கு வோட்டு கேட்க வேண்டும்? ஆனால், அவரும் அந்த நேர்ப் பாதையை விடுத்து, நேரு குடும்ப துருப்புச் சீட்டையே நாடியிருக்கிறார்!

காங்கிரஸ் தலைமை, நேரு குடும்ப ஆளுமை நிழலின்








பிடியிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள முற்படவில்லை என்பதுடன் விடுபட விரும்பவுமில்லை! இதனால்தான் ராகுல் காந்தியும் வேறு வழியின்றி குடும்பப் பெருமை பேச நேர்ந்திருக்கிறது.

ராகுல் சொன்னதைப்போல், இந்திரா காந்திதான் கிழக்குப் பாகிஸ்தானில் கிளர்ந்த அதிருப்தியைச் சாதகமாக்கிக்கொண்டு பங்களாதேஷ் உருவாக ராணுவ உதவி அளித்தார். ஆனால், அந்த வரலாற்றை இப்போது எடுத்துரைப்பதில், அப் போராட்டத்தில் பங்களாதேஷ் விடுதலைப் போராளிகளுக்கு இருந்த பங்கு மறக்கப்பட்டதால் பங்களா தேஷுக்கு வருத்தம். பாகிஸ்தானின் தோல்வியைச் சுட்டிக்காட்டியதால் அந்த நாட்டுக்கும் அதிருப்தி. ஏற்கெனவே இவ்விரண்டு நாடுகளுடனான அயலுறவுக் கொள்கை மெச்சும்படியில்லை. இந்நிலையில், எரிகிற நெருப்பில் எண்ணெய் ஊற்றுவதைப்போல் பேசி அதை மேலும் சோதனைக்குட்படுத்தியிருக்கிறார் ராகுல் காந்தி. விளைவு, எதிர்கட்சியினரின் வெறும் வாய்க்கு அவல் கிடைத்துவிட்டது.

இதில் வேடிக்கை என்னவென்றால், பாகிஸ்தானை மட்டம் தட்டுவதன் மூலம் ஹிந்து வோட்டுக்களைப் பெறும் திட்டத்தில்தான் ராகுல் காந்தி இப்படிப் பேசினார், என்றொரு விமர்சனம் வேறு வலம் வருகிறது!

மொத்தத்தில் அண்டை நாடுகளை அதிருப்திக்குள்ளாக்கி, எதிர்கட்சிகளைப் பலப்படுத்தியதுடன் மக்களுக்கு காங்கிரஸிடமிருந்து சிறிதளவு நம்பிக்கையையும் ஆட்டம்காணச் செய்யக்கூடியது ராகுல் காந்தியின் இந்தப் பேச்சு.

இந்தியாவின் வளர்ச்சிக்கு நேருவின் பங்களிப்பும், இந்திரா, ராஜீவின் பங்களிப்பும் வரலாறாகிவிட்டன. ஆனால், அந்தப் பழைய சாதனையில் குளிர்காய்வதன் மூலம் இன்று மக்களை ஈர்க்க முற்படுவது விபரீதமாக முடியும்.

புதிய தலைவர்கள், நம்பிக்கையூட்டும் நல்ல திட்டங்களைப் பற்றிப் பேச வேண்டும். தனி நபர் வழிபாட்டுச் சிறையிலிருந்து காங்கிரஸ் கட்சியை விடுவிக்க வேண்டும். அதுவே கட்சிக்கும் நாட்டுக்கும் நல்லது. ●



● **கோஸ்ட் ரைட்டிங் எழுதிய துண்டா? எழுதுவீர்களா?**

**- நந்தினி, தஞ்சை**

என்னது, கோஸ்ட் ரைட்டர் நானா? செத்தாலும் மாட்டேன்!

● **ஆண்கள் எப்படி இருக்க வேண்டும்?**

**- ஜே.துரைராஜ், சென்னை**

போற ரேட்டுல படம் வரைந்து பாகங்களைக் குறிக்கச் சொல்வீங்க போலருக்கே! ஓகே... குணத்தில் பெண்மிகம் போற்றும் ஆண்மிகவாதிகளாக இருத்தல் அழகு.

● **எல்லா மண்டையோடுகளும் சிரித்தபடியே தெரிவதைப் பற்றி...?**

**- அனன்யா, பெங்களூர் - 40**

அட பொறக்கும்போதுதான் அழுதோம்.... ஒரு சேஞ்சுக்குப் போகும் போதாவது சிரிப்போமேன்னு மண்டையோட்டுல உறைச்சிருக்கலாம்... பிறவிப் பிணி தீர்ந்த சந்தோஷமாகவும் இருக்கலாம்.

● **'Attitude determines the altitude...' இதற்கு இணையாகத் தமிழில் உண்டா?**

**- க. இரவி, பூனா**

வெள்ளத்தனைய மலர் நீட்டம்
மாந்தர்தம் -
உள்ளத் தனையது உயர்வு - வள்ளுவரின் இந்தக் குறளுக்கு இணையாக உருவானதுதான் உங்கள் ஆங்கிலக் குரல்...

● **நன்றாக உறங்கிக் கொண்டிருக்கும் உங்களை எழுப்பி 'டக்'கென்று ஒரு ஜோக் சொல்லச் சொன்னால் என்ன செய்வீர்கள்?**

**-ஏ.எஸ்.யோகானந்தம், அவ்வையார்பாளையம்**

யாரும் எழுப்பிவிடக் கூடாது என்பதற்காக நான் உறங்கும்முன் ஆவேசமாக டெலிபோன், ட்யூப்லைட்டுகளை உடைத்துவிட்டு, என் கடைசி ஆசை, உயில் போன்றவற்றை முன் எச்சரிக்கையாக எழுதி வைத்துவிட்டு 'ஜாக்கிரதையாக'ப் படுக்கும் லேஸி - மோகன்... உங்களுக்காக இனி 'ஜோக்' எழுதி வைத்துவிட்டு 'ஜோக்கிரதையாக'த் தூங்கணும் போலிருக்கு.

● **கற்றது கையளவு... கல்லாதது என்ன அளவு கிரேஸி? (கடலளவு கேட்டு அலுத்துவிட்டது)**

**- கெ.ராமனாதன், திருவான்மியூர்**

கல்லாததில் கற்கக் கூடியது ராமனாதனின் நம்பிக்'கை' அளவு...

● **மனைவியிடம் அடி வாங்கியதுண்டா?**

**- நீ.முத்துக்குமார், சிதம்பரம்**

என்ன இது சிதம்பரம் இப்ப மதுரையாகிவிட்டது? முத்துக்குமாரா இல்லை மனைவியால் தாக்கப்பட்ட மொத்துக்குமாரா! சார்... பல பொண் ஜாதிங்க புருஷன் சொல்லை வேத வாக்கா எடுத்துக்கும்... நீங்க ஆசைல ஆம்படையாளை செல்லமா 'அடியே அடியே'ன்னு கூப்பிட்டிருப்பீங்க... அவங்களும் உங்க பேச்சைத் தட்ட வேணாமேன்னு உங்களைத் தட்டி நொறுக்கிட்டாங்க போலிருக்கு... விடுங்க... அடிக்கற கைதான் அணைக்கும்.

● **நான் ஸ்வீட் எக்கச்சக்கமாக சாப்பிடுவேன்... நிறுத்த வழி சொல்**






# மனைவியிடம் அடி வாங்கியதுண்டா?

## » கிரேஸியைக் கேளுங்கள் «

லுங்காணும்?

- டி. ராமனுஜம்,
கும்பகோணம்

இதே கேள்வியை ராம கிருஷ்ண பரமஹம்சரிடம் ஒரு பெங்காலி ராமானுஜம் கேட்டபோது 'ஒரு மாதம் கழித்து வா' என்றார். அடுத்த மாதம் போனவரிடம் 'ஸ்வீட் சாப்பிடாதே உடம்புக்குக் கெடுதல்' என்று சொல்ல, 'இதை அப்பவே சொல்லியிருக்கலாமே' என்றார் கேட்டவர். 'அப்போது நானும் உன்னைப்போல ஸ்வீட் சாப்பிட்டுக் கொண்டிருந்தேன்... அட்வைஸ் பண்ண அருகதையில்லை' என்று பதிலளித்தார் பரமஹம்ஸர்... உங்களுக்கு நான் சொல்லும் பதில் 'அடுத்த ஜன்மத்தில் வாருங்க...'

● உங்களை 'பந்த்' அறிவிக்கச் சொன்னால் எதற்கு அறிவிப்பீர்கள்?

- திலீப், திருச்சி

இப்ப இருக்கற கடுப்புக்கு கிரிக்கெட் 'பந்த்'தை தயாரிக்கக் கூடாது என்பதற்காக பந்த் அறிவிப்பேன்... ○

# உலகக் கோப்பை உணர்த்திய உண்மைகள்!




டெண்டுல்கர் மீது இரண்டு நாளைக்கு ஒருமுறை புதுப் புகார்கள் வந்தவண்ணம் இருக்கின்றன.

**நா**ன்கு வருடங்களுக்கு ஒருமுறை நடக்கும் திருவிழாவுக்கு அடுத்த வாரம் திரை போடப்படுகிறது. 'எத்தனை முக்கியமான ஆட்டங்கள் ஆடினால் என்ன, உலகக் கோப்பைக்கு ஈடாகுமா?' என்று இந்தியா திரும்பிய டெண்டுல்கர் தன் உணர்ச்சிகளைக் கொட்டுகிறார். '2011-ல் இந்தியாவில் நடக்கும் உலகக் கோப்பைக்கான அணித் தேர்வை அடுத்த பங்களாதேஷ் டூரிலிருந்தே ஆரம்பிக்கிறோம்' என்கிறார் அணித் தேர்வுக் குழுத் தலைவர் வெங்சர்க்கார். கிரிக்கெட் உலகமே சுவாசிப்பதும் உயிர்த்திருப்பதும் உலகக் கோப்பைக்காக அன்றி வேறில்லை எனத் தெரிகிறது.

ஆரம்ப இரு உலகக் கோப்பைகளையும் வென்று ஆதிக்கம் செலுத்திய வெஸ்ட் இண்டீஸ் மண்ணில், நடப்பு உலகக் கோப்பை உணர்த்திய உண்மைகள் என்னென்ன?

மைதானப் பார்வையாளர்கள்தான் எந்த ஓர் ஆட்டத்தின் போக்கையும் மாற்றக்கூடியவர்கள். இந்திய அணி உள்நாட்டில் ராஜாவாகவும் வெளிநாட்டில் கூஜாவாகவும் பரிமளிப்பதற்கு இதுவே காரணம். இந்த உலகக் கோப்பையில் வெஸ்ட் இண்டீஸ் - ஆஸ்திரேலியா மோதிய முக்கியமான மேட்சைக்கூட காலி மைதானங்களைக் கொண்டே நடத்திக் காட்ட முடியும் என்பது அழுத்தம் திருத்தமாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது ('96 உலகக் கோப்பையில், சென்னையில் நடந்த ஆஸ்திரேலியா - நியூசிலாந்து மேட்சில் சேப்பாக்கம் நிரம்பி வழிந்தது). கிரிக்கெட் மைதானம் என்பது மேற்கிந்தியத் தீவு மக்களுக்கு ஒரு கொண்டாட்ட வெளி. ட்ரம்ஸ்களை, பீப்பிகளை மைதானத்

துக்கு எடுத்து வந்து ஆட்டம் பாட்டமாக நடனமாடி மாரியம்மன் கோயில் திருவிழா போல கிரிக்கெட் மேட்சைக் கண்டு களிப்பார்கள். ஆனால், அத்தனை கொண்டாட்டங்களுக்கும் தடை விதித்தது ஐ.சி.சி. எனவே, மக்கள் டி.வி. முன் அமர்ந்துவிட்டனர். மேற்கு இந்திய அணியின் தொடர் தோல்விகளுக்கு ஃபிட்னஸும் கவனமின்மையும் காரணமாகச் சொல்லப் படுகின்றன. அணியின் ட்ரெய்னர் (ஆஸ்திரேலியாக்காரர்) உலகக் கோப்பை சமயம் பார்த்து 'டாட்டா, பைபை' காண்பித்தது அங்கு சர்ச்சையாகியிருக்கிறது.



நியூசிலாந்து அணியில் ஒரு ஸ்டார் பிளேயர் கிடையாது. ஃபுல்டன், மெக்குலம் என கேட்டிராத பெயர்கள்; கண்காணாத வீரர்கள். ஆனால், நியூசிலாந்தை ஜெயிப்பதற்குள் எல்லா அணிகளுக்கும் தொண்டைத் தண்ணி வறண்டு விட்டது. அழகான வேகப் பந்து வீச்சாளர் ஷேன் பாண்ட். எல்லா அணி வீரர்களும் இவர் பந்துக்குக் குலை நடுங்குகிறார்கள்.

கடந்த ஏப்ரல் பதினைந்து அன்று இந்தியாவும், பாகிஸ்தானும் மோதியிருக்க வேண்டும். அன்று ஞாயிறு வேறு. வணிக ரீதியாக செய்து வைத்த ஏற்பாடுகளையெல்லாம் அயர்லாந்தும் பங்களாதேஷும் கவிழ்த்துவிட்டன. அன்றைய தினம் இந்த இரு நாடுகளின் ஆட்டத்தைப் பார்க்க வேண்டிய நிலைமைக்கு ரசிகர்கள் தள்ளப்பட்டார்கள். பங்களாதேஷின் தோல்விகளைப் பொறுக்க முடியாமல் அங்கேயும் உருவ பொம்மை எரிக்கத் தொடங்கி விட்டார்கள். கற்றுக் கொடுத்த இந்தியா வாழ்க!

மெக்ராத், லாரா, கும்ப்ளே போன்ற வீரர்கள் இந்த உலகக் கோப்பையோடு ஒன்டே கிரிக்கெட்டுக்கு வணக்கம் போடுகிறார்கள். டெண்டுல்கர், முரளிதரனுக்கு அடுத்த உலகக் கோப்பை மீதும் கண் இருக்கிறது.

விடாமல் ஆறு சிக்ஸர்கள் அடித்து கிப்ஸும் நான்கு விக்கெட்டுகள் சாய்த்து மலிங்காவும் தனிப்பெருமை கண்டுவிட்டார்கள். கிப்ஸிடம் உதை வாங்கிய நெதர்லாந்து பவுலர் பெவிலியன் திரும்பியபோது, சக வீரர்கள் அவரைச் சுற்றி நின்றுகொண்டு விழுந்து விழுந்து சிரித்திருக்கிறார்கள். 'எல்லாம் நேரம்டா' என்று மனதுக்குள் பொருமிக்கொண்டு அவரும் வீரர்களோடு சரிசமமாகக் கலந்து சிரித்திருக்கிறார்.



டெண்டுல்கர் மீது இரண்டு நாளைக்கு ஒருமுறை புதுப் புகார்கள் வந்தவண்ணம் இருக்கின்றன. அவரும் பொழுது போக வேண்டும் என்பதற்காக மெனக்கெட்டு எல்லாவற்றுக்கும் பதில் அளித்துக் கொண்டிருக்கிறார். ம்... மெக்ராத், பொலாக், ஷேன் பாண்ட் பந்துகளுக்கு அல்லவா இந்நேரம் அவர் விடை கொடுத்துக் கொண்டிருக்க வேண்டும்!

**- ச.ந.கண்ணன்**



# இந்த வலையில் சிக்கலாம்

ஆண்டாள் பாசுரங்கள் ஒவ்வொன்றிலும் அழகான தமிழ்ச் சொற்கள் கிடைக்கும். அதற்காகவாவது அதன் பக்தியைக்கூட புறக்கணித்துவிட்டு ரசிப்பவர்கள் இருக்கிறார்கள். தமிழால் முதலில் தனக்குள் அந்தப் பாடல் உங்களை இழுக்கும். உள்ளே நுழைந்துவிட்டால் போதும்… அதனுள் பக்தி என்கிற வலை விரித்துக் காத்திருக்கும். அதன் சுழற்சியிலிருந்து தப்ப முடியாது என்கிறார் கோதை.

பட்டாம்பூச்சி, வண்ணத்துப்பூச்சி என்றெல்லாம் இன்று சொல்லப்படும் ஜந்துவுக்கு ஆண்டாளின் காலத்தில் இந்திர கோபம் என்று பெயர். இது எப்படி என்று யோசிக்க வைக்கிறது. ஒருவேளை இந்திரனின் கோபத்தின் வண்ணமோ? திருமாலிருஞ்சோலையில் ஆண்டாள் பார்த்த பட்டாம்பூச்சிகள் அத்தனையும் சிவப்பு. ஒரே சமயத்தில் சோலை முழுவதும் குப்பென்று எழுந்து பரந்து பறந்து செல்கின்றன. நாச்சியார் திருமொழியின் இந்தப் பாடலைப் பாருங்கள்.

சிந்துரச் செம்பொடிப் போல் திருமாலிருஞ்சோலை எங்கும்
இந்திர கோபங்களே எழுந்தும் பரந்திட்டனவால்,
மந்தரம் நாட்டி அன்று மதுரக் கொழுஞ்சாறு கொண்ட
சுந்தரத் தோளுடையான் சுழலையினின்று உய்துங் கொலோ?

(இந்திரகோபம் - பட்டுப்பூச்சி; மந்தரம் - பாற்கடலைக் கடைந்த மந்தரமலை; சுழலை - விரித்த வலை, உய்துகொலோ - தப்பிக்கவும் முடியாமல்)

சிவப்பான பொடியை இரைத்ததுபோல திருமாலிருஞ்சோலையெங்கும் பட்டுப்பூச்சிகள் பறந்து விரிந்தன. அன்று மந்தர மலையை மத்தாக வைத்துப் பாற்கடலைக் கடந்து இனிப்பான அமுதம் எடுத்த அழகான தோள் கொண்டவன் விரித்த வலையிலிருந்து தப்பிக்க முடியுமா? தின வாழ்வில் காதல், பாசம், சம்சாரம், பதவி, மோகம் துவங்கி இண்டர்நெட் வரை எத்தனையோ விரித்த வலைகள் காத்திருக்கின்றன. கடைசியில் திருமாலின் வலையில் வந்து விழுந்தால் சரி.

(படிக்கலாம்)



# உங்களில் பலருக்கு

# எஸ்டேட் ஃப்ரெஷ் ஃபில்டர் காபி

# ஒரு மரபாகும்

E/G
ESTATE
FRESH
Coffee

வெகு காலமாக, புதிதாக தயாரிக்கப்பட்ட தரம் வாய்ந்த காபியை உங்கள் விருப்பத்திற்கேற்ற வகையில், உங்கள் ஒவ்வொருவருக்கும் நாங்கள் வழங்கி வருவதை நீங்கள் நன்கறிவீர்கள். மறுக்கவியலாத மற்றும் மிக உயர்ந்த தரத்துடன் எஸ்டேட் ஃப்ரெஷ் ஃபில்டர் காபி உற்பத்தி செய்யப்படுவதால், பலகாலமாக எங்கள் வாடிக்கையாளர்களால் அது பெரிதும் விரும்பப்பட்டு வருகிறது. தரத்தை விரும்பும் எங்கள் வாடிக்கையாளர்களின் வசதிக்காக, அவர்களுக்கு அருகாமையில் உள்ள கடைகளில் எஸ்டேட் ஃப்ரெஷ் ஃபில்டர் காபி கிடைப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. காலம் காலமாக உங்கள் ஆதரவையே எங்கள் நோக்கமாக





கொண்டுள்ள நாங்கள், உங்கள் பகுதி மற்றும் தமிழ்நாடு முழுவதிலும் எங்களது தரம் வாய்ந்த தயாரிப்பான எஸ்டேட் ஃப்ரெஷ் ஃபில்டர் காபியை புதிய எழில்மிகு மற்றும் சிறப்பான பேக்கிங்கில் விநியோகிக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. உங்கள் ஒவ்வொருவரின் நாவின் சுவையை திருப்தி செய்து, நீங்கள் சுவைக்கும் காபியின் மணம் உங்கள் நாவில் நெடுநேரம் நிலைத்திருக்கச் செய்வதே எங்கள் நோக்கமாகும். எனவே உங்கள் அருகாமையிலுள்ள பலசரக்கு கடைக்குச் சென்று, எஸ்டேட் ஃப்ரெஷ் ஃபில்டர் காபியை கேட்டு வாங்கிப் பருகி, உங்கள் காபியின் விசேஷ மணம் மற்றும் சுவையை அனுபவித்து மகிழுங்கள்.





இதுபோன்ற நிறைவில்லை
வேறெந்த காபியிலும்

COFFEE 85%
CHICORY 15%







For Door Delivery
Chennai:
044-24415290
Rest of Tamilnadu:
94862 63342

E/G
Estate Foods & Grains

சென்னை மற்றும் தமிழகமெங்கும் வியாபார விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன.
தொடர்பு கொள்க: Chennai:9841221796, Rest of Tamilnadu: 9486263342

# அப்பாவின் அறை!

» வித்யா சுப்ரமணியம் «

நள்ளிரவில் மின்சாரம் நின்றுபோக, காசிநாதன் உறக்கம் கலைந்து எழுந்தார். கைத்தடியை ஊன்றியபடி நடந்து சென்று பால்கனி கதவைத் திறந்தார். வெளிக்காற்று உள்ளே நுழைய, புழுக்கம் சற்றே குறைந்தது. வீட்டின் பின்புறம் ஒரு மைதானம், அதைக் கடந்து ஒரு மண் சாலை, அதற்கும் அப்பால் மயானம் ஒன்றிருந்தது. கடைசியாக எரியூட்டப்பட்டிருந்த சிதையிலிருந்து புகை எழும்பிக்கொண்டிருந்தது. வீட்டிற்குப் பின்னால் மயானம் என்பது வீட்டில் அனைவருக்கும் முதலில் அதிர்ச்சியாகத்தான் இருந்தது.

"என்னங்க இப்படி வாங்கிட்டீங்க?" மருமகள் புருஷனிடம் ஆதங்கத்தோடு கேட்டாள்.

"என்ன செய்யச் சொல்ற? நான் என்ன கோடீஸ்வரனா - அடையார்லயும் அண்ணாநகர்லயும் உனக்கு பங்களா கட்டித்தர? இந்த ஃப்ளாட் கம்மி விலைக்குக் கிடைச்சதே இந்த மயானத்தாலதான். வேணாம் வேணாம்னு எல்லாரும் ஒதுக்கவும் எனக்கு சல்லிசா கிடைச்சது. உன்னை யார் பின்னால பார்க்கச் சொல்றாங்க? கொஞ்ச நாள்ல வீட்டைச் சுத்தி காம்பவுண்ட் சுவர் வந்துடும் ஆறடிக்கு."

"மாடிலேர்ந்து தெரியுமே"

"மாடி பால்கனிக்கு ஏன் போற? ஒண்ணு செய்வோம். பால்கனியோட உள்ள அந்த அறையை அப்பாவுக்குக் குடுத்துடுவோம். முன்னாடி அறை நமக்கு இருக்கட்டும்."

அன்றிலிருந்து மயானம் பார்த்த இந்த அறையில்தான் காசிநாதனின் வாசம். ஆரம்பத்தில் பால்கனி கதவைத் திறக்கவே மாட்டார். அப்படியும் ஜன்னல் வழியே தூரத்தில் எரியும் சிதையின் ஜ்வாலை கண்ணில் படத்தான் செய்யும். தினம் நான்கைந்து பிணங்களாவது எரிந்தன. ஓய்வு நேரத்தில் வெட்டியான் குடித்துக் கொட்ட மடித்து விட்டு விழுந்து கிடப்பான், பிணம் மாதிரி.

ஆரம்பத்தில் பிணம் எரியும் காட்சி ஒரு வித படபடப்பை ஏற்படுத்திற்று. போகப் போக, அதுவே சுவாரஸ்யமான பொழுது போக்காயிற்று.

மாலை நேரம் மைதானம் கடந்து நடைப்பயிற்சிக்குச் செல்லும்போது வெட்டியான் கண்ணில் பட்டால் நின்று விசாரிப்பார்.

"இன்னிக்கு எத்தனை வந்துச்சு?"

"மூணு சாமி. அதுல ரெண்டு எழுபதுக்கு மேல. ஒண்ணு சின்ன வயசு. வரதட்சணைக் கொடுமை... தற்கொலை. அப்பங்காரன் அழு தான் பாரு. ஒரே பொண்ணாம். என் அடி வயிறே கலங்கிடுச்சு. கூட ஒரு குவார்ட்டர் வாங்கி ஊத்திக்கினேன்."

ஒரு மாதப் பழக்கத்தில் வெட்டியான் நன்கு சிநேகமாகிவிட்டான். வீட்டில் பிள்ளை கத்த ஆரம்பித்தான்.

"உனக்கு வாக்கிங் போக வேற இடமே கிடைக்கலையா?

"ஏன் மாமா இப்படிப் பண்றீங்க? வயசான காலத்துல உபகாரமில்லாட்டாலும் உபத்திரவமில்லாம இருக்கத் தெரியணும்" கடைசி வரியை முணுமுணுத்தாற்போல் சொல்லிக்கொண்டு சென்றாள் மருமகள்.

"ஏன் தாத்தா சுடுகாட்டுக்குப் போக அதுக்குள்ள என்ன அவசரம்?" பேரன் கிண்டலாகக் கேட்டான்.

"எழுபத்தஞ்சு வயசாச்சே. போகத்தானே வேணும்?"



## சிறப்புச் சிறுகதை

"சாவுன்னா உனக்கு பயமா, ஆசையா? எது அதிகம்?" பேரனுக்கு உடனே அவர் பதில் அளிக்கவில்லையென்றாலும் அவனது கேள்வி அவரை மிகவும் யோசிக்க வைத்தது. காசிநாதன் பெருமூச்சு விட்டார்.

சராசரி படிப்பு, சராசரி உத்யோகம், சராசரி வருமானம் என்று சராசரியாய் வாழ்ந்தவர் காசிநாதன். போராட்டங்களுக்கு நடுவேதான் வாழ்க்கை சிறிது சிறிதாக நகர்ந்திருக்கிறது. பிள்ளைக்கு எரிச்சல் - பெரிதாய் அவர் சொத்து பத்து எதுவும் சேர்த்து வைக்கவில்லை என்று. பெண்ணுக்கு அதை விட எரிச்சல், வசதியானவனுக்குத் தன்னைக் கட்டிக் கொடுக்கவில்லை என்று.

பணக்காரனுக்கு பிரச்னைகள் வராதா? ஒரு சிறிய அறை மட்டுமே கொண்ட வீட்டில் அவரும் அவர் மனைவியும் எந்தவித

மான சௌகர்யமுமின்றி சந்தோஷமாக ஜீவிக்கவில்லையா?

கல்யாணமாகி ஆறு வருடம் வரை குழந்தை பிறக்கவில்லை அவர்களுக்கு. இருப்பினும் தம்பியின் படிப்பு, தாயாரின் வைத்தியச் செலவு என்று பணம் உருண்டு ஓடிவிடும். பாதி நாள் இருவரும் பசியோடுதான் படுப்பார்கள்.

ஆனால், தன் பிள்ளையால் அப்படி இருக்க முடியவில்லை. அவருடைய சக்திக்கு மீறியதாய் இருந்தன அவன் ஆசைகள். எவ்வித சிரமமுமின்றி அவரது உழைப்பிலேயே பட்டங்கள் வாங்க ஆசைப்பட, ஒரு கட்டத்தில் அவரால் முடியவில்லை. 'நீ படிச்சது போதும்; ஏதாவது வேலை தேடிக்க!' என்று கூறிவிட்டார். அவன் அவரைக் கோபமும் வெறுப்புமாகப் பார்த்தான். அந்தக் கோபத்தை உள்ளுக்குள் பூட்டி வைத்துக்கொண்டான். அவனை அண்டி அவர் வாழ வேண்டிய சூழல் ஏற்பட்டபோது, பூட்டி வைத்த வெறுப்பும் கோபமும் அவ்வப்போது தலைகாட்டி அவரை சுருக் சுருக்கெனக் குத்தின. அதிலும் பெண்டாட்டி இறந்து, பிள்ளையின் தயவில் வாழ்கிற நிலை மிகக் கொடியது. காலை காஃபியே ஒன்பது மணிக்கு மேல்தான் ஆற அமரக் கிடைக்கும். அதுவும் இரண்டாம் டிகாக்ஷனில். வயோதிகம் எல்லா புலன்களிலும் படர்ந்து அதன் திறன்களைக் குறைத்தாலும் நாக்குக்கு மட்டும் மூப்பில்லை என்பார்கள். அது அவ்வப்போது எதற்காவது ஆசைப்படும். தயங்கித் தயங்கித்தான் மருமகளிடம் கேட்பார்.

"காரப் பணியாரமா...? சரிதான்... வயசானாலும் வாய் மட்டும் வக்கணையா கேக்குது!"

- சுருக்கெனச் சொல்லம்புகள் வந்து தாக்கும். நாலு தினங்கள் கழித்து வேண்டா வெறுப்பாக இரண்டு பணியாரங்கள் ஒரு தட்டில் சப்தத்தோடு வைக்கப்படும்.

"வயசான காலத்துல கேட்டுட்டு நீங்க மண்டையப் போட்டீங்கன்னா எங்களைப் பாவம் பிடிக்கவா?"

அவள் வேகமாய் உள்ளே போய் யாரிடமாவது தொடர்ந்து பொருமுவாள்.

"எத்தனை வயசானாலும் பொம்பளை இருந்தா கூடமாட ஒத்தாசை செய்வா. அந்தம்மா போனதுக்கு இவர் போயிருக்கலாம்.

## காதலிலிருந்து தாய்மைக்கு...!

"எல்லோரும் காதலை வைத்துக் கதை செய்ய, நான் இந்த முறை தாய்மையை நம்பிக் களமிறங்குகிறேன்'' என்கிறார் டைரக்டர் செல்வபாரதி. 'நினைத்தேன் வந்தாய்', 'ப்ரியமானவளே' போன்ற சூப்பர்ஹிட் படங்களைத் தந்தவர், 'தாய்மையை கௌரவப்படுத்தும் படம்' என்கிற அடைமொழியோடு தனது அடுத்த படத்தை இயக்கி வருகிறார். 'பசுபதி மே/பா ராசாக்காபாளையம்' என்கிற படத் தலைப்பைப் பார்த்து ஆச்சர்யப்பட்டு 'காதல் இல்லாம தமிழ் சினிமா தலைப்பா? என்றால், ''யாரும் வேண்டுமென்றே தலைப்பைத் திணிப்பதில்லை. ஏதோ ஒரு விதத்தில் படத்தின் மையக் கருத்தைப் பிரதிபலிக்கும் விதமாகத்தான் தலைப்புகள் வைக்கப்படுகின்றன. இந்தப் படத்திலும் ராசக்காபாளையத்தைச் சேர்ந்த வெள்ளந்தியான



**ஏனோ தெரியவில்லை, மரணத்தை அவர் விரும்பிய அளவுக்கு மரணம் அவரை விரும்பவில்லை. இன்று வரும்... நாளை வரும் என்கிற எதிர்பார்ப்பில் நாட்கள்தான் இறக்கின்றன.**

ரஞ்சித், சென்னை வந்து அம்மாவுக்காகப் படும் துயரங்களைத் துள்ளத் துடிக்கச் சொல்லியிருக்கிறோம்'' என்று கூறும் செல்வ பாரதி, ''உங்களுக்கொரு விஷயம் தெரியுமா? படப்பிடிப்பை முடித்து என் அம்மாவுக்கு அப் படக் காட்சிகளைப் பிரத்யேகமாகப் போட்டுக் காட்டினேன். காட்சிக்குக் காட்சி தாய்மை பொங்க, அழுதே விட்டார். சுமார் அரைமணி நேரம் தேவைப்பட்டது அவரைத் தேற்றுவதற்கு. ஒவ்வொரு மகனும் இப் படத்தைப் பார்த்துத் தன் தாயை நினைத்துக் கண்ணீர் விட்டே தீர வேண்டும்'' என்கிறார்.

- ரேவதி



'பசுபதி' படத்தில் ரஞ்சித், சிந்து துலானி...

எங்கஷ்டம் எமனுக்கு எங்க தெரியுது.'' இதையெல்லாம் கேட்கத்தான் இன்னும் தான் உயிரோடு இருக்கிறோமா என்று தோன்றும் காசிநாதனுக்கு.

ஏனோ தெரியவில்லை மரணத்தை அவர் விரும்பிய அளவுக்கு மரணம் அவரை விரும்பவில்லை. இன்று வரும், நாளை வரும் என்கிற எதிர்பார்ப்பில் நாட்கள்தான் இறக்கின்றன. மயானம் வழியாக நடந்து செல்லவும் பிள்ளை தடை போட்டுவிட்டான். நாலைந்து நாள் வேறு பக்கமாய் வாக் போனவர், ஐந்தாம் நாள் எல்லோரும் ஒரு திருமண வரவேற்புக்கு சென்றுவிட்ட தைரியத்தில் மயானத்தை நோக்கி நடந்தார்.

''என்ன சாமி, நாலு நாளா ஆளைக் காணும்? உடம்பு சரியில்லையா?'' பீடியை அணைத்துப் போட்டுவிட்டு நலம் விசாரித்தான் வெட்டியான்.

''உடம்புக்கு ஏதாச்சும் வந்தாத்தான் தேவலையே.''

''ஏஞ்சாமி அலுத்துக்கற?''

''அதை விடு. நீ பாக்கற இந்த வேலை உனக்குப் பயமால்லயா?''

''செத்தது என்ன செய்யும்? எனக்கு பயம் உசிரோட உலாத்தறவங்களைக் கண்டுதான்.''

அவர் விழியகலப் பார்த்தார்.

''நீ எப்டி இந்த வேலைக்கு வந்த?''

''பதினாறு வருஷத்துக்கு முந்தி என் பெண்டாட்டி, பிள்ளையை இங்க வெச்சுத்தான் எரிச்சேன். அப்போ நா ஒரு ஃபேக்டரில வாச்மேனா இருந்தேன். முதல் பிரசவம். ஆஸ்பத்திரில சரியா கவனிக்கல. என்ன செய்தாங்கன்னே தெரியல. தாய், பிள்ள ரெண்டும் பிழைக்கல. ஏழை உசிருக்கு அவ்வளோதான் மரியாதை. இங்கதான் கொண்டாந்து போட்டேன். ராத்திரி முழுக்க அதுங்க எரியறதை வெறிச்சுப் பார்த்துக்கிட்டு இங்கயே கிடந்தேன். அப்புறம் வீட்டுக்குப் போகல. இதே வீடாயிடுச்சு. பொண்டாட்டி, புள்ள எங்க இருக்கோ அதானே வீடு! தொழிலும் மாறிடுச்சு.''

சற்று நேரம் அங்கு அமைதி நிலவியது. ''இருட்டிட்டு வருது. நீ கிளம்பு சாமி. வீட்ல தேடப் போறாங்க.'' அவர் திரும்பி நடந்தார்.

நாட்காட்டி மேலும் ஏழு தாள்களை இழந்தது. அன்றைக்குக் காலையிலிருந்தே மருமகள் எரிச்சலில் இருந்தாள். பிள்ளை தலைகுனிந்து அமர்ந்திருக்க, அவள் புலம்பிக்கொண்டிருந்தாள்.

''யாருகிட்ட கொட்டிக் கிடக்குது காசு? மனுஷனுக்கு சாவு வந்தா போவத்தானே வேணும். இன்னும் பாடிகூட வீட்டுக்கு வந்தபாடில்ல. அதுக்குள்ள உங்க தங்கச்சி ஒரு லிஸ்ட்டே கொடுக்கறா... மோதிரமாம். அதுவும் ஒன்ற சவரனுக்குக் குறையக் கூடாதாம். முடியாதுன்னு நெத்தியடியா சொல்லிர வேண்டியதுதானே? மென்னு முழுங்கறீங்க!''

''அவங்க முறையைத்தானே அவ சொன்னா! துக்கத்துல இருக்கவங்ககிட்ட எப்டி முகத்துல அடிச்சாப்பல சொல்றது?''

''என்னாச்சு... சம்பந்தியா போய்ட்டார்?'' காசிநாதன் பதறியபடி கேட்டார். ''ஏன்டா எங்கிட்ட சொல்லக்கூடாதா?''

# கானல் நீர்



'மொழி' மாதிரி படங்கள் தமிழ் சினிமாவை அடுத்த கட்டத்துக்குக் கொண்டு போக, 'கானல் நீர்' பண்ணையார் காலத்திலிருந்தே இன்னும் மீளல. சின்னி ஜெயந்தோட அப்பா-அம்மா இறந்துபோக, சொத்தை மாமன்காரன் அபகரிக்க நினைச்சி, சின்னியை மனநலம் குன்றியவரா வளர்க்கறான்... என்னப்பு, அதுக்குள்ள கொட்டாவி விட்டா எப்படி? அப்புறம், நண்பர் ரித்தீஷ் (ஆச்சர்ய ஹீரோ!) மூலமா பண்ணையை மீட்டெடுக்கிறார் சின்னி.

நடிகராக ஸ்கோர் பண்ண அளவுக்கு சின்னி டைரக்டரா மின்னல. புதுமுக நாயகன் ரித்தீஷ் சண்டைக் காட்சிகள்ல தூள் பரத்தறார்... மத்த விஷயங்கள்லயும் கவனம் செலுத்தியிருக்கலாம். நாயகி செலக்ஷன் சொதப்பல். பாண்டு காமெடி பரவால்ல. 'ஆராரோ' பாட்டு மட்டும் தேறுது. பின்னணி இரைச்சல். கிராமத்துக் காட்சிகள்ல ஒளிப்பதிவு ஒகே. திரைக்கதை செமடல். மாந்திரீகம், அது இதுன்னு தேவையில்லாத விஷயங்கள் படத்துல அதிகம். சின்னி அடுத்தமுறை பக்காவான ஸ்கிரிப்டோட களமிறங்குவாராக!

- லஜ்ஜாவதி

---

"அதான் இப்ப சொல்லியாச்சு இல்ல?"

"எப்படியாம்?"

"வயசாய்டுச்சு. போய்ட்டார். யாரையும் படுத்தாம!" மருமகளின் குரல் மட்டும் கேட்டது.

"நீ போகும்போது என்னையும் கூட்டிட்டுப் போ."

"வேணாம் வேணாம். ஏற்கெனவே நா திண்டாடிட்டிருக்கேன். நீ வந்தா இன்னொரு ஆயிரம் தண்டச் செலவு. வயசான காலத்துல நீ வராட்டி அங்க யாரும் கோவிச்சுக்கப் போறதில்ல."

"அதில்லடா..."

"சொன்னாக் கேளுப்பா; தொண தொணக்காதே."

"காசு வேணா நா தரேண்டா..."

"எவ்ளோ வெச்சிருக்க? அப்படி நிறைய இருந்தா உன் மாப்ளைக்கு என்ன செய்யணுமோ அதை நீயே செஞ்சுடேன். எனக்குத் தலைவலி விட்டுச்சு."

"அவ்ளோக்கு நா எங்கடா போக? மாசா மாசம் வர பென்ஷனையே உங்கிட்டதானே தரேன். ஏதோ கால் காசு அரைக்காசுன்னு சேத்து வச்சது எழுநூறு ரூபா இருக்கு."

"பாத்தீங்களா பாத்தீங்களா, அவர் காசை எல்லாம் நீங்க பிடுங்கிக்கறீங்கன்னு சமயம் பார்த்துக் குத்திக் காட்டறார். தேவையா நமக்கு? பிச்சைக் காசு ரெண்டாயிரம் வருது பென்ஷன் பணம். ஆனா இவருக்கு நாம நாலாயிரம் செலவழிக்கிறோம். மூணு வேளை வக்கணையா இல்ல சாப்பிடறார். பொங்கிப் போட்டுப் போட்டு எனக்குத்தான் வயசாயிட்டு வருது. இவர் இருக்கற இருப்பைப் பார்த்தா கொள்ளுப் பேரன், எள்ளுப் பேரன்னு எட்டுத் தலைமுறையைப் பார்த்துட்டுத்தான் கிளம்புவார் போலிருக்கு. இந்த ஜென்மத்துல எனக்கு எங்க வீட்லேர்ந்து சம்பந்தி சாவுச் சீர்னு எதுவும் கிடைக்கப் போறதில்ல. செலவுதான் வந்துட்டிருக்கு."

"நா செத்தாலும் உனக்குச் செலவு தாம்மா."

சொல்லிவிட்டு காசிநாதன் வேதனையோடு தன் அறைக்கு வந்தார். மயானத்தில் ஏதோ ஒரு சிதை எரிந்துகொண்டிருந்தது. இவ்வளவு அருகிலிருக்கும் மயானம் தனக்கு மட்டுமேன் வெகு தூரமாகவே இருக்கிறது என்று எண்ண எண்ண, காசிநாதனுக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. குலுங்கிக் குலுங்கி அழ ஆரம்பித்தார். ○

ஓம்

ஸ்ரீகுருப்யோ நம:







ஓம் ஹ்ரீம் புவனேச்வர்யை நம:

**புதுக்கோட்டை**

**ஸ்ரீபுவனேச்வரீ ஸந்நிதியில்**

# ஒரு வருஷ சண்டீ ஹோமம் நிறைவு விழா

ஸர்வஜித் வருஷம், வைகாசி 11 வெள்ளி முதல் 18 வெள்ளி வரை

**(25-05-2007 to 01-06-2007)**

---

**வைகாசி 12 சனிக்கிழமை முதல் 13 ஞாயிறு வரை (26-05-07 to 27-05-07)**

**பரம பூஜ்ய ஸ்ரீசாந்தாநந்த மஹாஸ்வாமிகள் பக்தர்கள் மாநாடு நடைபெறும்.**

---

**வைகாசி 14 திங்கள் முதல் 18 வெள்ளி வரை (28-05-07 to 01-06-07)**

**தச லக்ஷ ஸ்ரீலலிதா நாம ஹோமம் நடைபெறும்.**

---

ஸ்ரீசாந்தாநந்த மஹாஸ்வாமிகளின் பக்தகோடிகள் அனைவரும் நிறைவு விழா நிகழ்வுகளிலும், மாநாட்டிலும் கலந்துகொண்டு குருவருளும், திருவருளும் பெற்று என்றும் இன்புற்று வாழ விரும்பிப் **பேரன்புடன் அழைக்கின்றோம்.**

இங்ஙனம்

**பரமபூஜ்ய ஸ்ரீஓங்காராநந்த மஹாஸ்வாமிகளின்**

அருளாணைப்படி,

**விழாக்குழுவினர்**

- நன்கொடைகள் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.
- அழைப்பிதழ் வேண்டுவோர் தங்களது தெளிவான முகவரியுடன் கீழ்காணும் முகவரிக்குக் கடிதம் எழுத வேண்டுகிறோம்.

ஸ்ரீஸ்ரீ ஜட்ஜ் ஸ்வாமிகள் அதிஷ்டானம். கீழ 7 ஆம் வீதி, புதுக்கோட்டை - 622 001.

☎ 04322-221440 / 222128 e-mail:srisri_ judge@sancharnet.in

## அவள்... வயதுக்கு மீறிய முதிர்ச்சியாலும்,

மெல்லிய உணர்ச்சிகளாலும், சமயோஜித புத்திசாலித்தனத்தாலும் குழைத்துச் செய்யப்பட்ட அழகு ஒழுகும் ஒரு பேரழகி.

பெயர்...? வேண்டாமே!

இந்தத் தொடரில் நான் பட்டதையும் கேள்விப்பட்டதையும் மாறி மாறி எழுதப் போகிறேன். செவிவழிச் செய்தியே ஆனாலும் அது இதயத்தில் ஏற்படுத்திய நில நடுக்கத்தையும், விழிகளுக்குள் அடித்த சுனாமி அலைகளையும் விவரிக்க, அதை எழுத்துக்களில் வரிக்க இயலுமா தெரியவில்லை.

சுத்தமாகப் பொய் போக்கி எழுதப்படும் சமாசாரம் எனினும், சம்பந்தப் பட்டவர்களைச் சுடக் கூடாதாதலால் பெயர் போக்கி.

அந்த அழகி எனக்கு அறிமுகமானபோது அவளுக்கு வயது... பத்துக்குள்ளிருக்கும்! உள்ளிருக்கும் வருத்தம் காட்டாமல் வசீகரிக்கும் சிரிப்பொன்று உண்டு அவளிடம், உதட்டைக் கோணிக்கொண்டு! அவளுக்கொரு பெயர் வைக்கலாமே... அனுபல்லவி!

அவளுடைய பாட்டி எனக்கு வேண்டியவர். அவர் மூலம் தெரிந்து கொண்டவை இனி...

அனுபல்லவிக்கு ஒரு அக்கா உண்டு. பெயர் (வைக்கலாமே) பல்லவி. பல வருடங் களுக்கு முன்னால் விவாகரத்து பெற்ற-வர்களில், பல்லவி தாயிடமும், அனுபல்லவி தந்தையிடமும் வளர்கிறார்கள். இந்தக் குழந்தை வேண்டாம் என்று எந்தத் தாயோ, தந்தையோ நினைப்பதில்லை. ஆனால், ஒரு தந்தையே தனக்குத் தாயாகவும் இருக்க வேண்டுமென அனுபல்லவிதான் தீர்மானித்தாள்.

தந்தையோ தன் உயிரில் உரிகட்டி, தன் இதயத்தையே கருப்பையாக்கி, அதில் அனுபல்லவியை வைத்து மீண்டும் சுமக்கத் துவங்கினான். அவளோ தந்தைக்கே தாயாய் மாறி பாசத்தால் பாலூட்டினாள். ஒரு மனிதனுக்குக் காதலியிடமோ, மனைவியிடமோ ஏதோ ஓர் எதிர்பார்ப்பும் அது கிடைத்ததும் ஈர்ப்பு குறைந் திடவோ, கூடிடவோ வாய்ப்புண்டு. ஆனால், ஒரு தந்தைக்குத் தன் மகளிடம் என்னதான் எதிர்பார்ப்பு இருந்திட முடியும்? அவளின் நல்வாழ்க்கையைத் தவிர!

இதை முற்றிலும் உணர்ந்த அந்தச் சின்ன மனுஷி தந்தையின் மனமல்ல, முகம்கூட கோணாமல் நடந்தாள். அந்தத் தந்தையும் தன் வியாபாரத்தையெல்லாம் (ரியல் எஸ்டேட்) தள்ளுபடி செய்துவிட்டு, அனுபல்லவியின் தலைவகிடுகூட கோணாமல் ஒரு சிலைபோல அவளைச் செதுக்கிப் பள்ளிக்கு அனுப்பிவிட்டு,

# உறைந்த நிமிடங்கள்!

விடும் வேளையில் வாசலிலும், தூக்கம் வரும் வேளையில் இமை வாசலிலும் காத்திருந்து, அவளின் மூடிய விழிகளில் இரவெல்லாம் இவன் கனவு கண்டு கொண்டிருந்தான்.

## » ரா.பார்த்திபன் «

அவனின் தூங்காத இரவுகளுக்குப் பின்னே சப்தம் சுத்தமாகப் புதைக்கப்பட்ட டி.வி.யின் அம்பத்திச் சில்லரை சேனல்களும் மாறிக் கொண்டிருக்கும். ஏதாவது ஒன்றில் ஒரு நகைக்கடை விளம்பரம் - அதில் தன் மகளைத் திருமணம் செய் தனுப்பும்போது கலங்கும் தந்தையைக் காட்டிவிட்டால் அவ்வளவுதான்... பார்த்துக் கொண்டிருப்பவனின் கன்னங்கள் உப்பளங்களாகும். அவளுக்குத் திருமணம் செய்து அனுப்பிவிட்டு, தான் மட்டும் எப்படி...? சமாளித்துவிடலாம். முதலில் அனுபல்லவி பெரிய மனுஷி ஆகும் அந்த நாளை எப்படிச் சமாளிப்பது? யாரிடம் கேட்பது?

அம்மாவிடம் இல்லாத குறை அன்றுதான் அவளுக்குப் பூதாகாரமாகுமோ? அந்தச் சமயத்தில் அம்மாதான் ஆதரவு என்றால், இருக்கட்டுமே அங்கேயும் சில நாட்கள். தனக்குள் பேச்சு வீரமாய் - கண்கள் மட்டும் ஈரமாய். இருப்பினும் நம் சைடிலும் ஏதாவது ஏற்பாடு செய்து வைக்கலாமென தன் நண்பர்களின் மனைவியரிடம் நட்பு பாராட்டி, முறைவாசல் செய்து கொடுத்து, அவர்களின் மனம் இளகி 'நீங்க எங்க குடும்பத்துல ஒருத்தர் மாதிரி. எப்ப, எந்த உதவி வேணும்னாலும் கேளுங்க' எனச் சொல்லும்வரைக் காத்திருந்து, சொல்லி முடிக்கும் முன் "அனுபல்லவிக்கு ஒரு முக்கிய விசேஷம்னா நீங்கதான் உதவிக்கு வரணும்" எனச் சொன்னதைக் கேட்க அவர்களுக்கே ஒரு மாதிரியாக ஆகிவிடும்...

இதையெல்லாம் அந்தப் பாட்டி சொல்லச் சொல்ல, அந்தத் தந்தையைப் பார்க்கும்போது தாய்மை என்பது பெண்பால் சம்பந்தப்பட்டது இல்லை என்பதை உணர முடிந்தது. இரண்டு, மூன்று வருடங்கள் கழித்து ஒரு நாள் அந்தப் பாட்டி 'அந்தப் பொண்ணு என்ன காரியம் பண்ணிட்டா தெரியுமா?' எனப் புதிர் போட்டு அவரே அவிழ்க்கத் தொடங்கினார்.

"எனக்கும் என் பையனுக்கும் இருக்கிற பிரச்னையில நான் அவங்க வீட்டுக்கு எப்பவாச்சும்தான் போவேன். அதனால அனு வயசுக்கு வந்து நாலு மாசம்

**தன் மகளைத் திருமணம் செய்தனுப்பும்போது கலங்கும் தந்தையைக் காட்டிவிட்டால் அவ்வளவுதான்... பார்த்துக் கொண்டிருப்பவனின் கன்னங்கள் உப்பளங்களாகும்.**



கழிச்சுத்தான் எனக்கே தெரிஞ்சது. 'அப்பாவுக்குத் தெரியுமா?'ன்னு கேட்டேன். 'யாருக்குமே தெரியாது, என் ஃப்ரண்ட்ஸ் தவிர'ன்னு சொன்னா. 'அடிப்பாவி ஏண்டீ இப்படி செஞ்சே'ன்னு கேட்டேன். அதுக்கு அவ 'அம்மாவுக்குத் தெரிஞ்சா, இதையே காரணமாக் காட்டி அவங்க என்னைக் கூட்டிட்டுப் போயிருப்பாங்கள்ல. அப்பாவை விட்டுட்டு நான் எப்படி அங்க போவேன்?'னு சொன்னா... வாயடைச்சுப் போயிட்டேன். ஒரு பொண்ணோட வாழ்க்கையில ரொம்ப முக்கியமான ஒரு விஷயம். கூடி நின்னு ஆறுதல் சொன்னாலே பயம் பிச்சித் திங்கும். என்னோட இத்தனை வயசுக்கு இப்படி ஒரு விஷயத்தைக் கேள்விப்பட்டதே இல்லை. அப்பன் மேல இப்படி உசுரை வச்சிருக்கே இந்தப் பொண்ணு! அவங்கப்பன் கிட்டே சொன்னேன். முதல்ல பேச்சே வராம உறைஞ்சு போனவன், சின்னப் புள்ளையாட்டம் உடைஞ்சு அழுவ ஆரம்பிச்சுட்டான். என்னால சமாதானப்படுத்த முடியாம அனுபல்லவியை அவன்கிட்ட போய்ப் பேசச் சொன்னேன். அவ தலையை வருடிக் கொடுத்து நெஞ்சோட சாச்சுக்கிட்டு ரொம்ப நேரம் அப்படியே உக்காந்திருந்தான்" என அந்தப் பாட்டி சொல்லச் சொல்ல, காதல் என்ற பினாத்தல்கள் ஏற்படுத்திய வலியைவிட, பாசம் என்பதற்கு இதைவிட வலிமை வாய்ந்த நிகழ்ச்சியை நான் கேட்டிராததால், என் இதயத் துடிப்பில் ஓர் அடைப்பாக இந்தச் செய்தி இடம் பெற்றிருக்கிறது.

**"இப்படி ஒரு விஷயத்தைக் கேள்விப்பட்டதே இல்லை. அப்பன் மேல இப்படி உசுர வச்சிருக்கே இந்தப் பொண்ணு!"**



ஓவியம்: செல்வகுமார்

இப்போதும், எப்போதாவது நான் அனுபல்லவியின் தந்தையைப் பார்க்கிறேன்.

ஆனால் அடிக்கடி தோன்றும்...

'................... அவள் தந்தை
என் நோற்றான்கொல் எனும் சொல்'

(மீண்டும்)



# காதல் வந்திருச்சு!

» கிரிகா «

அனிதாவின் அம்மாவுக்கு மயக்கமே வந்துவிட்டது.

அனிதா எம்.பி.ஏ. மாணவி - தன் லெக்சரரையே திருமணம் செய்து கொள்ளப் போகின்றேன் என்றால், அதிர்ச்சி வராமலா இருக்கும்.

"அனிதா. இப்படித் தடால்னு குண்டைத் தூக்கிப் போடறியேடி...?"

"அம்மா, நீ என்னதான் சொன்னாலும் நான் ரஞ்சன் சாரைத்தான் கல்யாணம் செஞ்சுக்குவேன். என் முடிவை மாத்த முடியாது" எனச் சீறினாள் அனிதா.

"என்னடி., ஏதாவது பாக்யராஜ் படம் பார்த்துட்டுப் பேசறியா..? உன் வயசென்ன...? அவரோட வயசென்ன? தெரிஞ்சுதான் பேசறியாடி?" அம்மா பதறினாள்.

"தெரியும்மா. தெரிஞ்சேதான் இந்த முடிவுக்கு வந்திருக்கேன்.."

"ஏண்டி... 'ஏதோ படிக்கிறேன், நாலு விஷயம் கத்துக்கிறேன்'னு சொன்னதாலதாண்டி உன்னைப் படிக்கவே அனுப்பினோம். ஆனா இப்படித் தலைல கல்லைப் போடறியேடி.?"

"நான் படிக்கத்தான் போனேம்மா. ஆனா, சாரோட பேச்சும் பழக்கவழக்கமும்தான் என்னைக் கவர்ந்திருக்கும்மா..."

"அவர் ஏற்கெனவே கல்யாணம் ஆனவர்டி....தெரிஞ்சுமா சம்மதிக்கிறே..?"

"தெரியும்மா. ஆனா, டைவர்ஸூம் ஆகியாச்சுங்கறதால ஒண்ணும் பயமில்லை..."

"ஏண்டி, உன்கூடப் படிக்கிறவங்க எல்லாரும் சிரிப்பாங்கடி.. காலேஜூல தலைகாட்ட முடியாதுடி.."

"ஊருக்காக எல்லாம் பார்த்தா முடியாதும்மா. அவரோட வாழப்போற என் வாழ்க்கைதான் முக்கியம்."

"நாங்க... நல்ல இடமா பார்த்துப் பண்ணி வைப்போம்டி...."

"போறும்மா. அப்படிச் சொல்லித்தான் நான் ப்ளஸ்டூ படிக்கும்போதே பண்ணி வைச்சீங்க. அந்தப் பொறுக்கிகிட்டருந்து இப்பத்தான் டைவர்ஸ் வாங்கித் தப்பிச்சேன். மறுபடியும் படிக்கலாம்னு போன இடத்துல நானே செலக்ட் பண்ணினவர்தான் இவர். நாங்க ரெண்டு பேருமே டைவர்ஸிங்கறதால வாழ்க்கையை நல்லா நடத்தத் தெரியும்" என்று கூறிக் கம்பீரமாக நடந்தாள் அனிதா.



ஸ்ரீ :





ஸ்ரீ அஹோபில மடத்தின்
ஆஸ்தான பத்திரிகை

65 ஆண்டுகளாக ஆன்மீகப் பணியில்

# ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியா

(தமிழ், ஆங்கில மாத இதழ்)

* ஜீயர் ஸ்வாமிகளின் அருளுரைகள்
* இதிகாஸ, புராணங்களின் விசேஷ கதைகள்
* திவ்யதேச எம்பெருமான்களின் பெருமைகள், வண்ணப்படங்கள்
* ஆசார்ய வைபவம்
* இந்த மாதம் உங்கள் நிலை
* மனம் மகிழும் மணப்பொருத்தம் அமைய திருமண விளம்பரங்கள்

*மற்றும் சுவையான கட்டுரைகள், கதைகள்,
மகான்கள் செய்த அற்புதங்கள்.*

**ஒவ்வொருவர் இல்லத்திலும் மாதம்தோறும்
ஸ்ரீந்ருஸிம்மர் அனுக்ரஹம் பெற இன்றே சந்தா செலுத்துவீர்**

| | | | |
|---|---|---|---|
| ஆயுள் சந்தா | : | Rs.10,000/- | |
| ஆண்டு சந்தா - Tamil | : | Rs. 200/- | $ 50 |
| ஆண்டு சந்தா - English | : | Rs. 250/- | $ 50 |
| தனி இதழ் தமிழ் | : | Rs. 20/- | |
| ஆங்கிலம் | : | Rs. 25/- | |

Publishers:
Sri Nrisimhapriya Trust,
30, Venkatesa Agraharam, Mylapore,
Chennai - 600 004. Phone: 044-24611540, 24614402
email:nrisimhapriya@vsnl.net

இராமாயணம், மஹாபாரதம், விஷ்ணுபுராணம், மற்றும் பல தனி வெளியீடுகளின் விவரங்களுக்குத் தொடர்பு கொள்ளவும்.

அந்தக் காலத்துல திருநெல்வேலி சீமை சேந்திமங்களத்துல, செம்பரன்னு ஒருத்தன் இருந்தான். அவனுக்கு ஏகப்பட்ட சொத்து, நிலம் எல்லாம் இருந்திச்சு. நாலு ஜோடி உழவு மாடுகளை வச்சிருந்தான். வெள்ளாம விளைச்சலும் அவன் ராசிக்கு நல்லா விளைஞ்சது. இவனும் பலருக்கும் தலைவன் மாதிரிச் செயல்பட்டு வந்தான். அந்த ஊர்ல துணி துவைச்சுக் கொடுக்க யாரும் இல்லாததால, இவன்கிட்ட வந்து மக்கள் முறையிட்டாங்க. இவனும் நீலன், பேச்சின்ற புதுமணத் தம்பதிய துணி வெளுக்குற வேலைக்கு வச்சான். அவுகளுக்கு ரெண்டு கழுதையும் வாங்கிக் கொடுத்தான்.

# மந்திரத்தால் மாண்டவன்!

பேச்சி குழந்தை உண்டாகி, அழகான ஓர் ஆம்பளைப் பிள்ளையைப் பெத்தெடுத்தாள். வாசமுத்துன்னு பேரும் வச்சாக.

பேச்சியின் அண்ணனான மாடன், 'மாந்திரீகன்'னு சுத்துப்பட்டிகள்ல பேர் வாங்கி இருந்தான். செம்பரனுக்குக் கல்யாணமாகி ரொம்பக் காலமாகியும் பேர் சொல்ல ஒரு பிள்ளை பிறக்கலை. அவன் பொண்டாட்டி பேரு செண்பகவல்லி. அவளும் ரொம்பச் சோர்ந்து போய் இருந்தா. வேண்டாத தெய்வம் இல்ல. சிலர் மாடனைப் பத்தி சொல்லி, அவன்கிட்ட குறி கேக்கச் சொன்னாங்க.

செம்பரன் தன் குறையை மாடனிடம் சொன்னான். மாடன் மாந்திரீகம் தெரிஞ்சவன். சில கணக்குகளைச் (மந்திரங்களை) சொல்லிக் கொடுத்தான் செம்பரனுக்கு. அதுபடியே அவனும் செய்ய, செண்பகவல்லி கருத்தரிச்சா. அழகான பொண்ணு பொறந்தது. சோணமுத்துன்னு பேர் வச்சு வளர்த்து வந்தாங்க.

அவளும் வளர்ந்து ஆளாக, நீலன் மகன் வாசமுத்துவும் வளர்ந்து ஆளா



னான். வாசமுத்து பெத்தவங்ககூடச் சேர்ந்து துணி வெளுக்கப் போனான். ஒருநாள் மாடன் ஊரான தாழக்குடிக் குப் போய், மாந்திரீகம் படிக்கணும்ங் கற தன்னோட ஆசையை தாய்மாமன் மாடனிடம் சொன்னான். மாடனும் தன் தங்கை மகன்ங்கிறதால வாச முத்து தனக்குத் தெரிந்த மந்திர தந்திர வித்தைகளையெல்லாம் ஒளிவுமறைவு இல்லாமல் சொல்லிக் கொடுத்தான். மாடனுக்கு ஒரு மகள் இருந் தாள். பேரு சாந்தி. அவ ளும் வளர்ந்து வாலிபமாகி இருந்தாள். அவள் தன் அத்தை மகனான வாச முத்துவைக் காதலிச்சா. இவனும் சம்மதிக்க, வாசமுத்துக்கும் சாந் திக்கும் கல்யாணம் நடந்திச்சு.

வாசமுத்துக்கு ஒரு சேக்காளி (நண் பன்) இருந்தான். அவன் பனை ஏறி பதனி இறக்கி விக் கறவன். வாசமுத் துக்குத் தேவைப்படும் போது பதனிக் கலயத் தில் சுண்ணாம்பு தட வாமல், தனிக் கள்ளை இறக்கிக் கொடுப்பான்.

வாசமுத்து கள் குடித்த மயக்கத்தில், ஒரு நாள் தான் மாந்திரீகம் கற்று வந் திருக்கிற விவரத்தைச் சேக்காளிகிட்ட சொன்னான். உடனே சேக்காளி எப் படியாவது வாசமுத்துகிட்டருந்து மாந் திரீக வித்தையைத் தான் கத்துக்கிட ணும்னு நினைச்சி, வாசமுத்துக்கு இஷ்டம்போல தனிக் கள்ளை அவன் கேட்கும்போதெல்லாம் கொடுத்தான்.

இது இப்படிப் போக, ஒருநாள் செம்பரன் வீட்டுக்கு வாசமுத்து அழுக்குத் துணி எடுக்கப் போனான். வீட்டில் யாரும் இல்லை. செம்பர னோட மகள் சோணமுத்து மட் டும் தனியே இருந்தாள். வாசமுத்துவை நேருக்கு நேராப் பார்த்ததும் முதல் பார்வையிலேயே மனசைப் பறிகொடுத் துட்டா சோணமுத்து. வாசமுத்துவும் அவள் மேல் மையல் கொண்டான்.

மாந்திரீகம் படித்த வாசமுத்து, எளி தாக அவளை வசப்படுத்திட்டான்.



ரெண்டு பேரும் ஒருத்தரை ஒருத்தர் விரும்புனாங்க.

சோணமுத்து படுத்துக் கிடக்கும் இடத்துக்கு நடுச் சாமம்போல, எலி ரூபம் கொண்டு வாசமுத்து போய் அவளைக் கூடிக் கிட்டு இருந்தான். ஊர் உலகத்துக்குத் தெரியாம அவங்க பழகிக்கிட்டிருந் தாங்க.

ஒருநாள் குடி போதையில் வாச முத்து வாய் தவறி தன் சேக்காளி கிட்ட, தான் சோணமுத்து விடம் ரகசிய மாகப் பழகுவதைச் சொல்லிட்டான்.

வாசமுத்துவிடம் எப்படியாவது மாந் திரீக வித்தை களைப் படிச்சிர ணும்னு நினைச்ச சேக்காளி, குடி போதையில் இருந்த வாசமுத்திடம், ''நீ எனக்கு மாந்திரீக வித்தைகளைச் சொல்லிக் கொடு. இல்லைன்னா செம் பரன்கிட்ட நீ அவன் மகளுடன் தொடுப்பு வச்சிருக் கிற சேதியைச் சொல்லிடுவேன்னு மிரட்டினான்.

வேற வழியில்லாம வாசமுத்து குடி போதையில் மாந்திரீக வித்தைகளை அரைகுறையாகச் சொல்லிக் கொடுத் தான். மாந்திரீக வித்தை கற்ற சேக்காளி, வாசமுத்துவை எப்படி யாவது காலி பண்ணணும்னு நினைச் சான்.

அதுக்குத் தகுந்த சந்தர்ப்பமும் வந்துச்சு. ஒருநாள் செம்பரன் வாச முத்துவோட சேக்காளிகிட்ட குடிக்க வந்தான். இதுதான் சமயம்னு நினைச்ச சேக்காளி, 'உன் மக சோணமுத்து, வாசமுத்துங்கறவனுக்குத் தொடுப்பா இருக்கா'ன்னு போட்டுக் கொடுத்துட் டான்.

**தன் புருசன் கொல்லப்பட்ட சேதியை அறிந்த சாந்தியும் உடன்கட்டை ஏறி, தன் உயிரை விட்டுட்டா!**



செம்பரன் பெருங் கோபத்தோடு வீடு போனான். சேதி தெரிஞ்ச சோணமுத்து, யாருக்கும் தெரியாமல் வீட்டை விட்டு மலங்காட் டுக்குப் போயிட்டா.

செம்பரன் ஒரு பெரிய கூட்டத் தோட மாந்திரீகன் வாசமுத்துவைத் தேடி அலைஞ் சான். வாசமுத்து தன் மாந்திரீக சக்தி யினால், சோண முத்து இருக்கும் இடத்தைக் கண்டு பிடிச்சு, அவளோடு சேர்ந்து மலங்காட் டுக்குள்ள இருந்தான்.

சேக்காளி தான் கற்ற அரைகுறை மாந்திரீகத்தால் வாசமுத்துவும் சோணமுத்துவும் மறைஞ்சி இருக்கிற இடத்தைக் கண்டு பிடிச்சி செம்பரன் கிட்ட சொல்லிட் டான்.

வாசமுத்து மாந்திரீகத்தால் தப்பி ஓடி விடுவான் என்பதால், நடுச்சாமம் போல ஒரு கூட்டமா மலங்காட்டுக் குப் போய், வாசமுத்தையும் சோண முத்தையும் வளைச்சிப் பிடிச்சி, அந்த இடத்துலயே அவங்க ரெண்டு பேரை யும் கொன்னுட்டாங்க.

தன் புருசன் கொல்லப்பட்ட சேதியை அறிஞ்ச சாந்தியும் உடன் கட்டை ஏறி, தன் உயிரை விட்டுட்டா. மந்திரம் கற்றாலும் கள் குடியால், நம்பிக்கை மோசத்தால் உயிரை விட்ட வாசமுத்தைத்தான் மக்கள் 'மந்திர மூர்த்தி' என்று சாமியாகக் கும்பிடு கிறார்கள்''னு கதையைச் சொல்லி முடித்தார் பொன்னன்.

(அடுத்த இதழில் முடியும்)



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 2007

**முதல் பரிசு ரூ.10,000/-**
**இரண்டாம் பரிசு ரூ.7,500/-**
**மூன்றாம் பரிசு ரூ.5,000/-**

தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ.500 சன்மானம் பெறும்.

யார் வேண்டுமானாலும் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் எழுதலாம் என்றாலும் எழுதுபவர் முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராகவோ அல்லது அறிமுக எழுத்தாளராகவோ இருந்தால் சிறப்புப் பரிசு உண்டு. மற்ற நிபந்தனைகள் வழக்கமானவை.

**விதிமுறைகள்:**

- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்படமாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும், போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதிமொழி தர வேண்டும்.
- படைப்பாளி முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராக இருந்தால் அதற்கான ஏதாவதொரு அத்தாட்சி (பத்தாம் வகுப்பு டி.சி - ஜெராக்ஸ் போன்றவை. நகல் மட்டுமே அனுப்பவும்) கண்டிப்பாக இணைக்கப்பட வேண்டும்.
- முழு வெள்ளைத்தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- போட்டிக்கு அனுப்பும் கதையை, முடிவுகள் வெளியாகும் வரை வேறு இதழுக்கோ, இணையதளத்துக்கோ, போட்டிக்கோ அனுப்பக்கூடாது.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும்வரை, எவ்விதக் கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 2007' என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி :

**ஆசிரியர், கல்கி, கல்கி பில்டிங்ஸ்,**
**47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல், சென்னை - 32**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : ஜூன் 15
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் **ஆகஸ்ட் 6** ஆண்டு மலரில் வெளியாகும். படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்துகொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.

**- ஆசிரியர்**



# காதல்...

மதனராஜன்

'சிவாஜி' படம் ரிலீசாகற தியேட்டர்ல டிக்கெட் கௌண்டரைத் திறந்து விட்ட கணக்கா, காதல் நந்தவனத்துக்கு 'திமுதிமு'ன்னு லெட்டர்ஸ் வந்து குவிய ஆரம்பிச்சுட்டது. போற போக்கைப் பார்த்தா 'ஹவுஸ்புல்' போர்டை மாட்டணும் போலிருக்கு.

இது கிரிக்கெட் சீசன், சூப்பர் எட்டு சூடு புடிச்சு அரையிறுதியில யார் வருவாங்கன்னு பந்தயம் நடக்குது. நம்ம வாசகர் திருச்சி ராமலிங்கம், காதலையும் கிரிக்கெட்டோடு ஒப்பிட்டு சூப்பரா எட்டு வரி கவிதையைக் கொடுத்திருக்காரு. படியுங்க, ரசியுங்க.

**உன் சிரிப்பெனும் பௌன்ஸரையும்**
**பேச்சென்ற ஸ்பின்னையும்**
**முறைப்பென்ற**
**ஃபாஸ்ட் பௌலிங்கையும்**
**சமாளித்துத் தப்பிக்கும்**
**எனது விக்கெட்**
**விழுந்து விடுகிறது**
**ஸ்லோ பாலாக வரும்**
**உன் கனிவுப் பார்வையில்!**

கிரிக்கெட்டும் மெகா சீரியல்களும் லவ்வர்ஸைகூட விட்டு வைக்கலை. நேத்து சென்னையோட முக்கிய பூங்காக்கள்ல ஒண்ணான சிறுவர் பூங்காவுல உட்கார்ந்து ஒரு ஜோடி பேசிட்டு இருந்துது. போற போக்குல என் காதுல விழுந்தது...

"பங்களாதேஷைப் பார்த்தியா பானு. சௌத் ஆப்ரிக்காவையே மண்ணைக் கவ்வ வெச்சுட்டாங்க."

"மண்ணைக் கவ்வ வெச்சுட்டாங்கன்னு சொன்னதும்தான் ஞாபகம் வருது மகேஷ். 'கோலங்கள்'ல அபியைப் பார்த்தியா? ஆதியைப் போட்டுப் பின்றா."

"ஆஸ்திரேலியா செமி ஃபைனலுக்குப் போய்ட்டாங்க. இந்த முறையும் அவங்கதான் வேர்ல்டு கப்பை வாங்குவாங்கன்னு நினைக்கிறேன்."

"'அரசி'யில செல்வி அரசி வேஷத்துக்கு மாறிட்டா. கலக்கப் போறா"

"இலங்கைகூட கலக்குவாங்கன்னு நினைக்கிறேன். இந்தியாதான் ஒண்ணும் இல்லாமப் போயிடுச்சு."

"லட்சுமி சீரியல்கூட ஆரம்பத்துல நல்லா இருந்தது. இப்ப ஒண்ணுமே இல்லாத மாதிரி தோணுது."

"சரி, மேட்ச் ஆரம்பிக்கற நேரம். நான் கிளம்பறேன்."

"நானும் 'ஆனந்தம்' பார்க்கணும். நாளைக்கு மீட் பண்ணலாம்."

(நாளைக்கு 'மீட்' பண்ணி மட்டும் இவங்க என்னத்த மீட்டப் போறாங்களாம்? இந்த மாதிரி ஒட்டுகேட்ட அனுபவம் உங்ககிட்ட இருந்தாலும் அனுப்பி வைங்க)

இந்த வாரமும் காதலைப் பத்தி இங்கிலீஷ் மாருங்கோ சொல்லிட்டுப் போன பொன்மொழிகள் ரெண்டு...

- காதல் இல்லாத வீடு ஆத்மா இல்லாத உடலைப் போன்றது.

**- ஜான் கூப்பர்**

- உண்மை, காதல் இரண்டும் ஒன்று சேரும்போது அவற்றை எதிர்ப்பது கடினம்.

**- கட்வொர்த்**

போன நந்தவனத்துல கேட்ட கேள்விக்கு உங்ககிட்ட இருந்து பதில்கள் வந்துட்டே இருக்கு. அதை அடுத்த வாரம் பார்க்கலாம். இதோ இந்த வாரக் கேள்வி:

**காதலியிடம் கடன் வாங்கலாமா?**

பதில்களை நாலு நாளைக்குள்ளே போஸ்ட், கூரியர்னு எதிலும் அனுப்பலாம். இ.மெயில்னா kalki@kalkiweekly.comக்கு அனுப்புங்க.

அப்புறம் நம்ம வாசகர் ராம்.ஆதிநாராயணன், தன்னோட லவ் சக்சஸான கதையைச் சொல்றாரு, கேளுங்க...

"நானும், என் மனைவி விஜயலக்ஷ்மியும் ஐந்து வருடங்களுக்கு மேல் காதலித்துத் திருமணம் செய்துகொண்டோம். இரு தரப்பிலும் எதிர்ப்பு. ஆனாலும் இருவரும் உறுதியாக இருந்தோம். பிரச்னையும், எதிர்ப்பும் அதிகமாக இருந்ததால் மூன்று வருடங்கள் பார்த்துக்கொள்ளாமலும், பேசாமலும் காதலில் உறுதியாக நின்றோம். எங்கள் உறுதி இரு வீட்டாரையும் மனம்மாறச் செய்துவிட்டது. இரு வீட்டாரின் பூரண சம்மதத்துடன் 4.2.2001 அன்று எங்களது காதல் திருமணம் வெகுவிமரிசையாக நடந்தது. காதலித்தபோது நாங்கள் இருவரும் ஒருமுறைகூட 'ஐ லவ் யூ' சொல்லிக்கொண்டதில்லை. இன்று இல்லற வாழ்வில் தினம் தினம், நொடிக்கு நொடி இருவரும் காதலித்துக் கொண்டிருக்கிறோம்"னு சொன்னவர், காதலர்களுக்கு ஒரு அட்வைஸும் சொல்றார்... "காதலியுங்கள். உயிருக்கு உயிரானவரை கைவிட்டு விடாதீர்கள். எதிர்ப்பு வருகிறதே என்று கோழைத்தனமாக உயிரை மாய்த்துக் கொள்ளாதீர்கள். காதல் புனிதமானது. வாழ்க்கை வாழ்வதற்கே!"



• ராம் ஆதிநாராயணன் - விஜயலக்ஷ்மி தம்பதி...

என்ன வாசகர்களே... அடுத்த வாரம் சந்திப்போமா...?

**காதலுடன்...**
**மதனராஜன்**

# ...நந்தவனம்

‘அவ்வளவுதான்... ஆட்டம் க்ளோஸ்’ என்று அனைவரையும் நினைக்க வைத்தவர் நடிகை சிநேகா. ஒரு கட்டத்தில் தமிழ்ப்பட வாய்ப்புகள் குறைந்துவிட, தெலுங்குப் பக்கம் தாவினார். மறுபடி இப்போது கோடம்பாக்கத்தைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கிறார். கையில் அத்தனைப் படங்கள்! அதிலும் அவர் பெரிதும் எதிர்பார்ப்பது, தங்கர்பச்சான் இயக்கத்தில் வெளிவரவுள்ள ‘பள்ளிக்கூடம்’ படத்தைத்தான். இதில் சிநேகா ஏற்றிருப்பது டீச்சர் வேடம்.

“படத்தில் நான் கோகிலா டீச்சர். சின்ன வயசுல டீச்சர் ஆகணும்ங்கறதுதான் என் கனவா இருந்தது. அப்புறம், டாக்டர் ஆகணும்னு ஆசைப்பட்டேன். அம்மாவுக்கு ஒரு ஆபரேஷன் நடந்தது. அதிலிருந்து ஊசி, மருந்துன்னா பயம் வந்து, டாக்டர் ஆசையே போயிடுச்சு. கடைசியில் நடிகையாயிட்டேன். சின்ன வயசுல மாறுவேடப் போட்டியில் டீச்சர் வேஷம் போட்டு, எங்க ஸ்கூல் ஹெச்.எம்.மையே மிரட்டியிருக்கேன். எனக்கு அந்தப் போட்டியில் முதல் பரிசு கிடைத்தது. இப்ப பள்ளிக்கூடத்துல நிஜமாவே நான் கோகிலா டீச்சர். வித்தியாசமான அனுபவம். டீச்சருங்க தெய்வத்துக்குச் சமானம். ஒரு குழந்தையோட இரண்டாவது தாய். தங்கர் சார் தந்த வாய்ப்பை சிறப்பா செஞ்சிருக்கேன்னு நினைக்கிறேன். ‘அழகி’ மாதிரி இந்தப் படமும் தமிழ் சினிமாவுல மறக்க முடியாத படமா அமையும்” என்று இனிப்பாகப் பேசும் சிநேகா, ‘நான் அவனில்லை’ படத்தில் ஐந்து நாயகிகளில் ஒருவராகவும் நடிக்கிறார்.

“பல ஹீரோயின்கள்கூட நடிக்கிறது எனக்கு ஒண்ணும் புதுசு இல்ல. ஏற்கெனவே ‘ஆனந்தம்’ படத்தில் மூன்று ஹீரோயின்கள்கூட நடிச்சேன். ‘ஆட்டோகிராஃப்’ல நான்கு ஹீரோயின்கள்! எத்தனை பேர் இருந்தாலும் எனக்கு என் கேரக்டர் முக்கியம். ஆட்டோகிராஃப் வந்ததும் பலரும் என் நடிப்பைப் பாராட்டினாங்க. ‘நான் அவனில்லை’ வந்தப்புறமும் அது தொடரும் பாருங்க” என்கிறார்.

‘சரி, த்ரிஷா, அஸின், ஸ்ரேயா என்று போட்டி பலமாகிவிட்டதே...!’ என்றால்,

“எனக்குப் போட்டி சிநேகாதான்” என்று சடாரென்று கதவடைக்கிறார்.

“பார்த்திபன் கனவு படத்தை மறக்க முடியாது. ஹீரோயின்களுக்கு முக்கியத்துவம் தராத தமிழ் சினிமாவுல எனக்கு இரட்டை வேடம் கொடுத்து நடிக்கச் சொன்ன கரு.பழனியப்பன் சாரை இப்ப நினைச்சாலும் பெருமையா இருக்கு. ஒரு





# லா டீச்சர்

விபத்தில் அடிபட்டு, ஆஸ்பத்திரியில் இருந்தேன். 'நீங்கதான் இந்த கேரக்டர் பண்ணணும்'னு விடாப்பிடியா இருந்த கரு.பழனியப்பன், எனக்காக ஆறு மாசம் கழிச்சுத்தான் ஷூட்டிங்கைத் தொடங்கினார். அதே மாதிரி, ஆட்டோகிராஃப்ல சேரனின் தோழியா நடிச்சதை நினைச்சாலே இனிமையா இருக்கு. படத்தில் மட்டுமல்ல... நிஜத்திலும் நாங்க நல்ல நண்பர்கள். இன்னிக்கு வரைக்கும் சேரன்தான் என்னோட பெஸ்ட் ஃப்ரெண்ட்' என்று கூறும் சிநேகா,

விமர்சனங்களை எப்படி எடுத்துக் கொள்கிறார்?

"முதலில் கஷ்டமா இருக்கும். அப்புறம் சரியாயிடும். 'புதுப்பேட்டை' படத்தில் என் கேரக்டரை எல்லோருமே விமர்சனம் பண்ணினாங்க. அது என்னை ரொம்பவே பாதிச்சது. எல்லோரும் எப்பவும் படத்தை படமா மட்டுமே பார்க்கக் கத்துக்கணும். கொடுத்த கேரக்டரை சிறப்பா செய்றதுதான் முக்கியம்" என்கிறவர், சமீபத்தில் கல்யாணம் மண்டபம் ஒன்றைக் கட்டியுள்ளார்.

"அதை என்னோட அப்பா விருப்பப்பட்டுக் கட்டினார்; நானல்ல. அதே மாதிரி எனக்கு இப்போ கல்யாணமும் இல்ல. முதல் படத்துலயே ஸ்டேட் அவார்ட் வாங்கினேன். இன்னும் நிறைய சாதிக்கணும்!"

- சுமதி

**மேஷம்:** புதிய பொறுப்பான பதவிகள் தேடி வரும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். பண வசதி பெருகும். மேல்நாட்டுக் கல்வி பயில்வதற்கு அனுகூலம் ஏற்படும். குழந்தைகள் வழியில் மனக்கவலை உண்டாகும். ராகு/கேதுவை வெள்ளி, செவ்வாய்கிழமைகளில் வழிபாடு செய்து வரவும்.

**ரிஷபம்:** திருமண காரியம் கைகூடும். பணவரவுக்குப் பஞ்சம் இருக்காது. புதிய ஆடை, ஆபரண, அலங்காரப் பொருட்கள் சேரும். வெளிநாட்டு வேலைவாய்ப்பு தேடி வரும். அந்நிய நாட்டு மனிதர்களால் அனுகூலம் ஏற்படும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். கல்வி வளம் மேலோங்கும். வெள்ளி, செவ்வாய்க்கிழமைகளில் ராகு/கேதுவுக்கு அர்ச்சனை செய்யவும்.

**மிதுனம்:** எதிலும் தடைகள் ஏற்பட்டு காரியம் நிறைவேறும். கொடுக்கல், வாங்கலில் கவனம் தேவை. உடல்நிலையில் கோளாறு ஏற்பட்டு விலகும். வேலையில் மாற்றம் உண்டாகும். சகோதரர்களால் நற்பயன் ஏற்படும். சனிக்கிழமையில் ஆஞ்சநேயருக்கு அர்ச்சனை செய்யவும்.

**கடகம்:** எதிலும் கவனத்துடன் செயல்படுவது நல்லது. குடும்ப உறவில் விட்டுக் கொடுத்துப் போகவும். வாகனங்களில் செல்வோர் கவனத்துடன் இருக்கவும். உத்தியோகத்தில் வேலைப்பளு அதிகரிக்கும். செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் கேது/ராகுவை அர்ச்சனை செய்து வழிபாடு செய்து வரவும்.

**சிம்மம்:** பணவரவு அதிகரிக்கும். நீண்டகாலக் கடன் பிரச்னைகள் தீரும். நல்ல மதிப்பு ஏற்படும். புதிய வாகனம் வாங்க நேரிடும். அனாவசியமான செலவுகள் ஏற்படும். வெளியூர்ப் பிரயாணம் செல்வீர்கள். வீடு மாற்றம், தொழில் மாற்றம் ஏற்படுத்தும். வேலையில் நற்பெயரை உண்டாக்கும். சனிக்கிழமையில் குருவுக்கு அர்ச்சனை செய்யவும். அன்னதானம் செய்தல் நன்மை பயக்கும்.

**கன்னி:** கல்வி வளம் மேலோங்கும். பணக் கஷ்டம் விலகும். தந்தை மூலம் ஆதாயம் உண்டாகும். பெயர், புகழ் ஏற்படும். தடைகள் விலகித் திருமணம் கைகூடும். தொழில் துறையில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். வியாழக்கிழமை தோறும் குரு பகவானுக்கு அர்ச்சனை செய்து வரவும்.

**துலாம்:** பணவரவு ஏற்படும். நல்ல



# பரத்வாஜ் பதில்கள்

**எ**ங்கள் மகளுக்குத் திருமண வாழ்வு எப்படி அமையும்? பரிகாரம் தேவையா?

**-மாலதி மகாதேவன், மும்பை**

உங்கள் மகளுக்கு 2007-ல், வெளிநாட்டில் வேலை செய்யும் வரன் அமையும். உறவு கிடையாது. படித்த, பண்புள்ள வரன் அமையும். பரிகாரம் தேவை இல்லை.

**எ**ன் மகனுக்குத் திருமண வாய்ப்பு எப்படியுள்ளது?

**- எம்.எஸ்.வேம்பன், மேட்டூர் அணை**

உங்கள் மகனுக்கு 2007ல் திருமணம் முடியும். பரிகாரம் தேவை இல்லை.

# நடக்குமென்பார்; நடக்கும்!

தஞ்சை பரத்வாஜ்

## 22.4.2007 முதல் 28.4.2007 வரை

மதிப்பு, மரியாதை உண்டாகும். தடைகள் விலகித் திருமணம் கைகூடும். வேலை மாற்றம் ஏற்படும். வீடு மாற்றம் உண்டு. சனிக்கிழமைதோறும் ஆஞ்சநேயருக்கு அர்ச்சனை செய்து வரவும். வெள்ளி/செவ்வாய்க்கிழமைகளில் நவக்கிரஹ வழிபாடு செய்து வரவும்.

**விருச்சிகம்:** தொழிலில் தொல்லைகள் இருக்கும். மறைமுக எதிர்ப்பு இருக்கும். சுப காரிய நிகழ்ச்சி கைகூடும். வெளியூர்ப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். வேலை மாற்றம் ஏற்படும். புதிய வேலை கிடைக்கும். நீண்ட காலக் கடன் தொல்லை குறையும். மனச்சலனம் விலகும். செவ்வாய்/வெள்ளிதோறும் நவக்கிரஹ வழிபாடு செய்து வரவும். வியாழன்தோறும் ராகவேந்திரர் சுவாமி தரிசனம் செய்தல் நலம்.

**தனுசு:** வீண் விரையம் உண்டாகும். தொழில் ஸ்தானத்தில் ஏற்றத் தாழ்வு ஏற்படும். பண நெருக்கடிகள் உண்டாகும். மறைமுக எதிர்ப்புகள் இருக்காது. வேலையில் இடமாற்றம் ஏற்படும். வியாழன்/சனிக்கிழமைதோறும் நவக்கிரஹங்களுக்கு ஒன்பது முறை வலம் வந்து குரு/சனிக்கு அர்ச்சனை வழிபாடு செய்து வர, சிரமங்கள் போகும். ஆஞ்சநேயர் நாமாவளி படித்து வரவும்.

**மகரம்:** மலைபோல் வரும் கஷ்டம் பனிபோல் விலகும். உடல்நிலையில் கவனம் செலுத்தவும். வீடு/மனை வாங்கும் யோகம் கிட்டும். மனமகிழ்ச்சி ஏற்படும். சனிக்கிழமைதோறும் ஆஞ்சநேயரை ஒன்பது முறை வலம் வரவும். செவ்வாய்/வெள்ளிக்கிழமைகளில் கேது/ராகுவை வழிபாடு செய்துவர, நற்பலன் உண்டாகும்.

**கும்பம்:** வேலையில் மாற்றம் உண்டாகும். இடமாற்றம் ஏற்படும். வேலைப் பளு அதிகரிக்கும். சுபச் செலவு ஏற்படும். திடீர் தனயோகம் கிடைக்கும். சகோதரர்களால் ஆதாயம் கிட்டும். மனக்குழப்பம் விலகும். மனதைரியம் கிட்டும். வியாழன், வெள்ளி, செவ்வாய், சனிக்கிழமைகளில் நவகிரஹ வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**மீனம்:** நினைத்த காரியம் கைகூடும். குடும்பத்தில் சுபநிகழ்ச்சி நடக்கும். உடல் நிலை நன்றாக இருக்கும். வீடு/மனை வாங்கும் யோகம் கிட்டும். கொடுக்கல், வாங்கலில் எச்சரிக்கை தேவை. வெளியூர்ப் பிரயாணம் செல்ல நேரிடும். மனசஞ்சலம் ஏற்படும். உடன்பிறப்பால் ஆதாயம் ஏற்படும். ஆரோக்கியம் நன்றாக இருக்கும். ஆஞ்சநேயரை வழிபட்டு வருதல் நலம் பயக்கும். ○



● சக்தியுடன் நர்த்தகி...

**நர்த்தகி நடராஜ் உடனான சென்ற வார சந்திப்பின் தொடர்ச்சி...**

"லண்டன் பி.பி.ஸி.யில், ஒரு பரதக் கலைஞர் என்கிற முறையில், என்னைப் பேட்டி காண அழைத்தார்கள். எல்லாக் கேள்விகளுக்கும் எனக்குத் தெரிந்த ஓட்டை ஆங்கிலத்தில் சமாளித்துப் பதில் சொன்னேன். கடைசியாக ஒரு கேள்வி கேட்டார் அந்த நிருபர் : 'நீங்கள் பரத நாட்டியக் கலைஞராகியிராவிட்டால் என்ன ஆகியிருப்பீர்கள்?'

பேட்டி காணப்படும் பலரிடம் கேட்கப்படக் கூடிய சராசரிக் கேள்விதான் இது. ஆனால் என் பதில் மட்டும் சராசரியானதல்ல...

'பரதக் கலைஞராக உயர்ந்திராவிட்டால் மும்பை அல்லது கொல்கத்தாவில் விலைமாதாக இருந்திருப்பேன்' என்று சொன்னேன். உண்மையும் அதுதான்!"

**பா**ல் திரிபுக்குள்ளாகும் அனேகம் குழந்தைகளைப் போல் நர்த்தகியும் பெற்ற தாயால் வீட்டை விட்டு விரப்பட்டு வெளியேறியவர்தான். சிறிய வயதிலேயே சக்தி துணையாக வாய்த்ததால் இருவரும் சேர்ந்தே குடும்பம் ஏற்படுத்திய காயங்களையும் பள்ளிச் சூழல் இழைத்த அநீதிகளையும் தாங்கி வளர்ந்திருக்கிறார்கள். தங்களுக்குள் நிகழ்வது என்ன என்று புரிவதற்

> **"பெற்ற தாய் உள்பட அனைவரின் புறக்கணிப்பையும் சமாளிக்க முடியாமல் உடைந்து சிதறும் இளம் திருநங்கைகளுக்கு என்ன செய்யப் போகிறோம்...?"**

# "திருநங்கைகளைப் புரிந்து கொள்ளுங்கள்!"

## –நர்த்தகி நடராஜ்

குள் இரக்கமற்ற, உயிர் உறிஞ்சும் வெளி உலகில் வந்து விழுந்து, திருநங்கைக் கூட்டத்தில் இணைந்து, அந்த வாழ்க்கை முறை தவறு என்ற விவேகம் இயல்பிலேயே இருந்ததால் அதிலிருந்து வெளியேறியிருக்கிறார்கள். கலை



ஆர்வம் இவர்களை தஞ்சையில் கிட்டப்பா பிள்ளையிடம் அழைத்துச் சென்றிருக்கிறது. கடுமையான சோதனைக்குப் பிறகே அவரும் இவர்களை சிஷ்யைகளாக ஏற்றிருக்கிறார். வெளியே தங்குவது நித்திய சோதனையாக இருக்கவே, வீட்டிலேயே அடைக்கலம் கேட்டு இந்த மாணவிகள் இறைஞ்ச, அவரும் ஏற்றுப் பாதுகாப்புத் தர, அதுவே அவர்களுடைய குருகுலவாசமாக இன்று அறியப்படுகிறது.

கிட்டப்பா பிள்ளை வஞ்சனையில்லாமல் வழங்கிய கலைக் கொடையும் நர்த்தகி, சக்தியிடம் இயல்பாகவே அமைந்திருந்த பக்தியும் அவர்களைச் சமூகத்தின் களைகளாக மாறாமல் காப்பாற்றியதுடன் மிக உயர்ந்த கலைஞர்கள் என்ற நிலைக்கு உயர்த்தியிருக்கிறது. நர்த்தகி மட்டுமே நடனக் கலைஞராக அங்கீகாரம் பெற்றாலும் சக்தி அவரது ஒப்பனை, அலங்காரம் வழிகாட்டல், விமர்சனம் அனைத்திலும் கலந்து நிற்கும் துணையாக விளங்குகிறார். மீடியா இன்று நர்த்தகியைக் கலைஞர் என்ற முறையிலேயே வெளிச்சப்படுத்திக் கொண்டிருக்கிறது. ஆனால்...

"இன்னமும் எங்களுக்கு வாடகைக்கு ஒரு வீடு தர யாருமே யோசிக்கிறார்கள். கற்பகாம்பாள் அருகே, கலை மையங்கள் சூழ மயிலாப்பூரில் வசிக்கவே நாங்கள் விரும்புகிறோம். ஆனால் நன்கு தெரிந்தவர்கள்கூட வீடு தர நாசூக்காக மறுக்கிறார்கள்-பொய்க் காரணங்கள் சொல்கிறார்கள். சமுதாய அங்கீகாரமும் மத்திய-மாநில அரசுகளின் அங்கீகாரமும் பெற்ற எங்களுக்கே இந்த கதி என்றால் திருநங்கைக் கூட்டத்தின் இதர சகோதரிகளுடைய கதி என்ன...?

பசியின் கொடுமைதான் அவர்களை அலங்கோலத்தில் தள்ளுகிறது என்பதை சமுதாயம் மறந்துவிடுகிறது. சிறு வயதில் உணர்வுரீதியாகவும் உடல்ரீதியாகவும் பாதுகாப்புக் கிடைத்தால் அவர்கள் ஏன் இப்படிப்பட்டக் கூட்டத்தில் போய் விழப்போகிறார்கள்? புறக்கணிக்கப்பட்டு, காயப்படுத்தப்பட்டவர்கள் ஒன்று திரண்டால் நிகழக்கூடிய விபரீதம்தான் திருநங்கைக் கூட்டத்தினருக்கு மீண்டும் மீண்டும் நடந்து கொண்டிருக்கிறது. அவர்கள் நடத்தையை நான் நியாயப்படுத்த முற்படவில்லை. ஆனால் இனியேனும் அவர்களைப் புரிந்து கொள்ளுங்கள் என்று கேட்கிறேன்.



# “எங்களுக்கு வாடகைக்கு ஒரு வீடு தர யாருமே யோசிக்கிறார்கள்”

தீராநோயின் அச்சுறுத்தலுக்கு அஞ்சி மட்டும் திருநங்கைகள் மீது அரசும் என்.ஜி.ஓ.க்களும் கவனம் செலுத்தினால் போதாது. இந்தக் கவனம், வளர்ந்து விபசார வலைக்குள் சிக்கிவிட்டவர்கள் மீது மட்டுமே விழும்.

விவரம் புரியாத வயதில் தனக்குள் நடக்கும் விநோதத்தையும், புரிந்துகொள்ள முடியாமல், பெற்ற தாய் உள்பட அனைவரின் புறக்கணிப்பையும் சமாளிக்க முடியாமல் உடைந்து சிதறும் இளம் திருநங்கைகளுக்கு என்ன செய்யப் போகிறோம்..?

முதலில் பெற்றோருக்கு விழிப்புணர்வு ஊட்டுங்கள். இந்தக் குழந்தைகளும் இறைவனின், இயற்கையின் சிருஷ்டி என்கிற உணர்வு பலத்தைக் கொடுங்கள். பள்ளி ஆசிரியர்களுக்குப் பயிற்சி கொடுங்கள்.

இப்படிப்பட்ட குழந்தைகளைப் பெரும்பாலும் அவர்கள்தான் முதலில் அடையாளம் காண்பார்கள். பெற்ற தாய் கூட ஆண் பிள்ளை என்பதாகவே கொண்டு, பெண்குழந்தைக்குத் தரக்கூடிய கவனத்தைத் தரமாட்டாள். ஆனால், அந்தப் பருவத்தில் திருநங்கைகளுக்குப் பெண்மையின் அரவணைப்பும் பாதுகாப்புமே ரொம்ப தேவைப்படுகின்றன. ஆண் உலகம் அவர்களை அச்சுறுத்தி சீண்டுகிறது.

இதெல்லாம் எப்போது, எப்படி மாறும் என்று யோசித்து மலைத்துப் போய் விடக்கூடாது. அரசு ஜி.ஓ.க்களும் விதிகளும் வெறும் புள்ளிகள்தான். அவற்றைப் பயன்படுத்தித் தப்பில்லாமல் கோலம் போட வேண்டியது சமுதாயம்தான். பொதுவாக எந்த மாற்றமும் அடிமட்ட மனிதர்களிடையே நிகழ வேண்டும் என்பார்கள். ஆனால், இந்த விஷயத்தில் மட்டும் மனமாற்றம் மேல்தட்டு மக்களிடமிருந்துதான் ஆரம்பிக்க வேண்டும். செல்வச் சீமான்கள் வீட்டுத் திருநங்கைகளுக்குக்கூட இன்று ஏழைகளின் குடிசைகளில்தான் இடமும் அங்கீகாரமும் கிடைக்கின்றன. அந்த அங்கீகாரம் ஆரோக்கியமானதாக எப்போதும் இருப்பதில்லை என்பதுதான் கொடுமை. ஆனால் அருவருப்போடு அடித்துவிரட்டாத இடத்தில் தானே திருநங்கைகள் அடைக்கலம் தேட முடியும்... இதை மாற்றுவதும் திருநங்கைகளை உயர்த்துவதும் சமுதாயத்தின் கையில்தான் இருக்கிறது.''

- திருத்தமாகப் பேசி முடிகிறார் நர்த்தகி. அவர் நாட்டியத்தின் அசைவுகளிலும் கை முத்திரைகளிலும் காணக் கூடிய திருத்தம் அவர் சிந்தனையில் பளிச்சிடுகிறது. நடனத்தின்போது அவர் வெளிப்படுத்தும் உணர்ச்சிகளின் சத்திய ஒளி அவர் சொற்களிலும் வீசுகிறது.

**- சீதா ரவி, சுகந்தி ஜி.பாரதி**

படங்கள் : **ஸ்ரீஹரி**

## அருள்வாக்கு



# மறைக்காதே...!

சாதாரணமாக ஒரு தப்புச் செய்தபோது உங்களுக்கு என்ன தோன்றுகிறது? அது ஓர் அழுக்கு மாதிரி உங்கள் மனசையே உறுத்துகிறது. உடனே அந்த அழுக்கை யாரும் தெரிந்துகொண்டு விடக் கூடாது என்று அதை மூடி மறைக்கத் தோன்றுகிறது. நியாயமாக, தவறுதல் உண்டானவுடன் பிரார்த்தனை பண்ணினால், அந்தப் பிரார்த்தனையே சோப்பைப் போல் அந்தத் தப்பை அகற்றி விடும். அப்படிச் செய்யாமல் தப்பை மற்றவர்கள் தெரிந்து கொள்ள இடம் கொடுக்காமல் மூட வேண்டும் என்கிறபோது பொய் சொல்ல வேண்டியதாகிறது. அழுக்கைத் தேய்த்துக் கழுவாமல், மூடி மூடி வைத்தால் சீழ் பிடித்துச் சிரங்காகிவிடும். அது மாதிரி, தப்பை மூடியவுடன் அது பொய் என்ற சிரங்காக ஆகிவிடுகிறது. உள்ளத்தை ரொம்பவும் கெடுக்கிற பயங்கரமான சிரங்கு பொய் தான்.

பயமும் உள்ளத் தூய்மையைக் கெடுக்கிற அழுக்குதான். தப்பு செய்தால் கூட, அதை உணர்ந்து, பணிவுடன் உள்ளபடி பெரியவர்களிடம் சொல்ல வேண்டுமே ஒழிய, பொய்யால் மூடி மறைக்கக் கூடாது. தப்பு செய்தது போதாது என்று, பொய்யும் சொன்னோம் என்பது வெளிப்பட்டு நமக்கு மேலும் அவமானம், கஷ்டம்தான் ஏற்படும். உள்ளபடி சொன்னால் பெரியவர்கள் மன்னித்துவிடுவார்கள். மன்னிக்காமல் அவர்கள் தண்டித்தாலும் பரவாயில்லை. அவர்களுக்கு அந்த உரிமை உண்டு. 'நாம் தப்பு செய்தோம்; அதனால் அதற்குரிய தண்டனையைப் பெறுகிறோம்' என்று தைரியத்துடன் தண்டனையை ஏற்க வேண்டும். தைரியம், சத்தியம் இவையெல்லாம் மன அழுக்கைப் போக்குகிற சோப், சீயக்காய் மாதிரி.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**



''எங்க பங்களாவிலே சம்பந்தி வந்திருந்த அன்னிக்குப் பார்த்து ரெய்டு! டென்ஷன்...!''

''உங்க பாடு தேவலை! எங்க வீட்டுக்கு வந்த ஆபீசர்கள்லே தலைமை அதிகாரியே என் சம்பந்திதான்! மகா கேவலம்!''

- பெ. கலாசாமி



''ஆட்டோ ரேட் கூடினா அதுக்காக இப்படியா?''

''என்ன விஷயம்?''

''பிரசவத்துக்குப் பாதி தூரம் இலவசம்னு அந்த ஆட்டோவுல போட்டிருக்கு பாரு!''

- அம்பை தேவா

# கனவில்



'' முதியோர் இல்லம் ஆரம்பிக்கப் போறேன். உங்களால் முடிந்த உதவி செய்யுங்க...''

''தாராளமா...! எங்க வீட்டிலேயே ஐந்து பேர் இருக்காங்க... சேர்த்துக் கோங்க...''

- தேனி எஸ்.மாரியப்பன்

"ஹோட்டல் வாஷ்பேஷின்கிட்டே போய் ஏன் உன் லவ்வரிடம் சண்டை போட்டே?"

"அங்கேதானே 'கை கழுவும்' இடம்னு போட்டிருந்தது!"

- எம்.அசோக்ராஜா





"ராத்திரி கனவில் என்னை ஒரு கழுதை உதைக்கற மாதிரி இருந்தது..."

"ஐயையோ, சாரிங்க... உங்களைத்தான் நான் உதைத்தேனா?"

- என்.சி.தர்மலிங்கம்

# வந்த கழுதை!

"உங்களை எனக்குத் தெரியவே தெரியாதே... எப்படி உங்களுக்குக் கடன் தர முடியும்?"

"உங்களுக்கு அப்துல் கலாமைத் தெரியுமா?"

"ஓ... தெரியுமே...!"

"எனக்கும் அப்துல் கலாமைத் தெரியும். எவ்வளவு பெரிய ஒற்றுமை. இப்ப கடன் கொடுங்க!"

- பி.ஜோதிரஞ்சன்



# 16

**» பா.ராகவன் «**



எம்எல்ஏ.வின் வீடு வேளச்சேரிக்கும் மடிப்பாக்கத்துக்கும் இடைப்பட்ட பகுதியில், மிகச் சமீபத்தில் முளைத்திருந்த ஒரு புதிய காலனியில் இருந்தது. நினைவு தெரிந்த நாளாக அந்த இடத்தில் மாபெரும் குப்பைமேடு ஒன்று காட்சியளிக்கும். வாரம்தோறும் குறிப்பிட்ட தினத்தில் அங்கே குப்பை லாரிகள் வந்து இறக்கிவிட்டுப் போகும். மாநகரக் குப்பை, மாபெரும் குப்பை.

திடீரென்று சில வருடங்களுக்கு முன்பு அந்தக் குப்பை மேட்டை ஓர் எவரெஸ்ட் சிகரமாகக் கருதி யாரோ கொடி நட்டு விட்டுப் போனார்கள். கட்சிக் கொடி. குறுகிய கால இடைவெளியில் அந்தக் கொடி பிடுங்கப்பட்டு வேறொரு கொடி நடப்பட்டு, சிறியதொரு கலவரம் உருவானது. காவல்துறை நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது. எம்.எல்.ஏ. தங்கவேலுவின் மச்சான் ஒரு நாள் பேப்பரில் விளம்பரம் அளித்திருந்தார். சுத்தமான குடிநீர், மெயின் ரோடிலிருந்து ஐந்து நிமிட நடைதூரம். மிக வேகமாக வளர்ந்து வரும் பிராந்தியம். கல்லூரிகள், மருத்துவமனை, பஸ் நிலையம். பிரசித்தி பெற்ற தொழிற்கேந்திரங்கள் உதித்துக் கொண்டிருக்கும் பிராந்தியம். சதுர அடி அறுநூறு ரூபாய். பழனி தண்டாயுதபாணி நகர். வாரீர், வாரீர். முன்பதிவு நடைபெறுகிறது.

முத்துராமனுக்கு நிச்சயம் அது வியப்புத்தான். இன்றைய தேதியில் அந்த இடத்தில் அறுநூறு ரூபாய்க்கு அரையங்குல இடம் கிடைப்பதுகூடக் கஷ்டம். அரசியல்வாதிகளுக்கு மிகுந்த தொலை நோக்கும் அவசியமாக இருக்கிறது. எம்.எல்.ஏ. தங்கவேலுதான் முதன்முதலில் அங்கே வீடு கட்டி கிரஹப் பிரவேசம் செய்தவர். வானளாவிய காம்பவுண்டு சுவர் எழுப்பப்பட்டு, உள்ளே சிறியதொரு நீச்சல் குளம். தோட்டத்துடன் நான்கு கிரவுண்டுகளில் கட்டப்பட்ட வீடு. கவனமாகப் பெயர்ப் பலகையில் தலைவரின் தந்தையார் பெயரைப் பொறித்து மரியாதை செய்திருந்தார். கிரஹப் பிரவேசத்துக்குத் தலைவர் உள்பட கட்சி முக்கியஸ்தர்கள் பலரும் சென்றிருந்தார்கள். எம்.எல்.ஏ.வின் தொடக்ககால அரசியல் வாழ்க்கையில் ஓரளவு வழிகாட்டிப் பங்களித்தவர் என்கிற வகையில் முத்துராமனின் தந்தைக்கும் அழைப்பு அனுப்பப்பட்டிருந்தது. வெள்ளை வேட்டி, சட்டையுடன் புறப்பட்டவருடன் முத்துராமனும் சென்றிருந்தான். கட்சி மேடைகளில் மட்டும்

# கொசு

பார்த்திருந்த தலைவர்களை அவன் நேருக்கு நேர் பார்த்த முதல் சந்தர்ப்பம் அதுதான்!

சுவாதீனமாக நீச்சல் குளத்தருகே நாற்காலி போட்டு அமர்ந்திருந்தவர்களின் பேச்சில், மேடையில் காணும் பொங்குத் தமிழ் இல்லை. வெகு அநாயாசமாக சென்னையின் பாரம்பரியம் மிக்க வசைச் சொற்கள் இறைப்பட்டுக் கொண்டிருந்தன. மாற்றுக் கட்சி நண்பர்களின் அந்தரங்கங்கள் குறித்து நகைச்சுவைத் துணுக்குகள் பரிமாறிக் கொள்ளப்பட்டன. குளிர்பானங்கள் அருந்தி, விருந்து உண்டு, பல் குத்திக் கொண்டு, தங்கவேலுவுக்கு வாழ்த்துச் சொல்லி விடைபெற்றுப் போனார்கள்.

காலனி வளர்ந்து, குப்பைமேடு குறித்த நினைவு அற்றுப்போகத் தொடங்கிவிட்டது. பின்னால் யாரோ முயற்சி செய்து அந்த இடத்துக்குப் பைசா செலவில்லாமல் பெருநகர வளர்ச்சி வாரியத்தின் அப்ரூவல் வாங்கிவிட்டார்கள். அனுமதி பெற்ற லே அவுட். சதுர அடி ஆயிரம் ரூபாய், இரண்டாயிரம் ரூபாய், மூவாயிரம், நாலாயிரம். ஏலத்தொகை போல் வளர்ந்து, ஒரு கட்டத்தில் இடமற்றுப் போனது. முதல் குடிமகனான எம்.எல்.ஏ. தங்கவேலு பெருவாரியான வோட்டு வித்தியாசத்தில் காலனியின் மறைமுக நிலக்கிழாரானார். தென் சென்னையின் நில மதிப்பை எந்த எல்லை வரையும் உயர்த்திக்கொண்டு போகமுடியும் என்று முதன்முதலில் நிரூபித்தவர் அவர்.



"சிங்காரத்துக்கு நேரம் சரியில்லய்யா. கட்சில பல பேர விரோதிச்சிக் கிட்டிருக்கான். பொறுமையா இருந்தா கிடைக்க வேண்டியது கிடைக்கும்னு அவனுக்குப் புரியல."

முத்துராமன் சென்றபோது எம்.எல்.ஏ. வீட்டில்தான் இருந்தார். முதல் மாடி பால்கனியில் ஈசி சேர் போட்டு, சாய்ந்து படுத்திருந்தார். அருகே அவரது உதவியாளர்கள் பேப்பர் படித்து விவரம் சொல்லிக்கொண்டிருந்தார்கள். எதிரே இருந்த டீப்பாயில் நாலைந்து செல்ஃபோன்கள் கிடந்தன. அடித்த தொலைபேசிகளை ஒருவன் அணைத்து வைத்துக்

கொண்டே இருந்தான்.

முத்துராமன் வந்திருக்கும் விவரம் அறிந்ததும் எம்.எல்.ஏ. மேலே வரச் சொன்னார்.

"உக்காருய்யா."

"இருக்கட்டும்ணே. ஒரு முக்கியமான விஷயம். அதான் வந்தேன்."

"சொல்லு. சிங்காரம் கட்சி மாறிட்டானா?"

முத்துராமனுக்குத் 'திக்'கென்றிருந்தது. பரபரப்பாக, "அது தெரியாதுண்ணே. ஆத்தங்கரைல வேலை நடக்குதில்ல? அங்க யாரோ நாலஞ்சு ரவுடிங்க வந்து பசங்களப் போட்டு அடிச்சி, வேலைய நிறுத்தச் சொல்லி கலாட்டா பண்ணிட்டுப் போயிருக்காங்க. யாருன்னு தெரியல. சிங்காரண்ணன் ஊர்ல இல்ல. அதான் உங்களாண்ட விஷயத்த சொல்லி..."

தங்கவேலு யோசித்தார். உதவியாளப் பையனை கீழே அனுப்பி யாருக்கோ ஃபோன் செய்யச் சொன்னார். மீண்டும் சில நிமிடங்கள் யோசித்துக்கொண்டே இருந்தார்.

"பச்சையா சொல்லவா? நான் யாரையும் அனுப்பல."

"ஐயோ என்னண்ணே பேசறீங்க? நீங்க செய்வீங்களா? எனக்குத் தெரியாதா? உங்களுக்குத் தெரியாம, உங்ககிட்ட சொல்லாம அவருதான் இந்த மாதிரி ஒரு வேலைய ஆரம்பிச்சிட்டாருன்னா, ஏதோ ஆர்வக் கோளாறு. உங்க அனுமதி இருந்திருந்தா இப்படி எவனும் வந்திருப்பானா?"

"நம்மாளுங்க யாருக்கானா அடிகிடி பட்டிருச்சாய்யா?"

அவரது அக்கறை முத்துராமனுக்கு மகிழ்ச்சியளித்தது. "பெரிசா ஒண்ணும் இல்லண்ணே. உங்களாண்ட சொல்லிருவேன்னு உரக்கச் சொன்னேன். அப்பால ஓடிட்டானுங்க."

எம்.எல்.ஏ. சிரித்தார். "சிங்காரத்துக்கு நேரம் சரியில்லய்யா. கட்சில பல பேர விரோதிச்சிக்கிட்டிருக்கான். பொறுமையா இருந்தா கிடைக்க வேண்டியது கிடைக்கும்னு அவனுக்குப் புரியல. அவசரப்படுறான். பாரு, பாளையங்கோட்டை மாநாட்டுக்கு நான் அஞ்சு லட்ச ரூவா நிதியுதவி செஞ்சிருக்கேன். தலைவருக்குத் தெரியும். எம்.எல்.ஏ. நிதி குடுக்கறது பெரிய விசயமில்லன்னு தோணும். ஆனா, கட்சில வசதி உள்ளவங்க எல்லாரும் தர்றதுதான் வழக்கம். நம்ம சிங்காரத்தோப்பு முருகேசன் இல்ல... மூணு லட்சம் குடுத்திருக்காரு! அவரு என்ன பதவிலயா இருக்காரு? நுப்பத்தஞ்சு வருசமா கட்சியே கதின்னு கெடக்கறவரு. ராயபுரம் காசிலிங்கம், ஆறு லட்சமாம். மீன் பிடித் தொழிலாளிதான். என்ன பதவி அவருக்கு? ஒரு மண்ணும் கிடையாது. பதவி யாய்யா முக்கியம்? கட்சி முக்கியம். தலைவரு முக்கியம். மத்த எதையும் நெனைக்காம எவன் கட்சிக்கு ஒழைக்கறானோ, அவனுக்குக் கடவுள் பதவி குடுப்பாரு. இது புரியல அந்தச் சனியனுக்கு. சொம்மா பதவி பதவின்னு சொறி புடிச்சவனாட்டம் அலையுது.





தொகுதிக்கு நான் ஒண்ணும் செய்யறதில்லைன்னு அங்கங்க ஃபோட்டோ புடிச்சி ஃபைல் பண்ணிக்கிட்டிருக்குதாம்."

"நாக்கு அழுகிரும்ணே. நீங்க இல்லன்னா எங்க பேட்டைக்குத் தண்ணி ஏது? எங்க பேட்டைய விடுங்க. எல்லா எடத்துக்கும் ரோடு? ஜம்போ சைசு பஸ் ஸ்டாண்டுங்க. நீங்க செய்யாம யாரு செஞ்சாங்களாம்?"

# உற்சாக சந்திரன்!



• 'உற்சாகம்' நந்தா, ஷெரீன்...

'கண்ணெதிரே தோன்றினாள்' படம் மூலம் பட்டிதொட்டியெங்கும் பரபரப்பாகப் பேசப்பட்ட இயக்குநர் ரவிச்சந்திரன், அதன்பிறகு 'மஜ்னு', 'சந்தித்த வேளை' என்று இரண்டு படங்களை இயக்கிவிட்டு காணாமல் போய்விட்டார். இப்போது மறுபடி உற்சாகமாகத் திரும்பியிருக்கிறார்.

''உண்மைதான். அதனால்தான் படத்தோட பேரைக்கூட 'உற்சாகம்'னு வச்சிருக்கேன். இதுவரை பார்க்காத 'நந்தா'வை இந்தப் படத்துல பார்க்கலாம். கவர்ச்சிக்காக மட்டுமே பயன்பட்ட ஷெரீனை மிகப் பிரமாதமா பயன்படுத்தி இருக்கேன். நல்ல ஸ்கிரிப்ட் கிடைக்காததுதான் இத்தனை பெரிய இடைவெளிக்குக் காரணம். உற்சாகத்தோட வெற்றி அந்த இடைவெளியை நிரப்பிடும். கதையைவிட திரைக்கதையை ரொம்ப பவர்ஃபுல்லா அமைச்சிருக்கேன். டயலாக் போர்ஷன் ரொம்பக் கம்மி. மொத்தமே முப்பது பக்கம்தான்'' என்று மூச்சுவிடாமல் பேசியவரிடம், 'இனியும் உங்களைத் தேட வேண்டியிருக்காதே...' என்றால் ''சான்ஸே இல்லை. இனி அடுத்தடுத்து படம் பண்ணி அசத்தப் போறேன்'' என்று சிரிக்கிறார்.

**- வினோ**

''தபாரு முத்து, வெளிப்படையா சொல்றேன். உங்க குப்பத்துக்கு சிங்காரம் நல்லது செய்யறேன்னு கெளம்பினது எனுக்குப் புடிக்கலதான். ஆனா, அவன் மேல இருக்கற வெறுப்புல உங்காளுங்கள அடிக்க ஆளனுப்பற அளவுக்கு நான் கேவலமானவன் இல்ல. எனக்கு அவன் விரோதிதான். ஆனா, இந்தச் சம்பவம் எனக்கு வேற ஒண்ண சொல்லுது. என்னிய மாதிரி வேற யாரோ ஒரு பெரியாளுக்கும் விரோதியாயிருக்கான். அது யாருன்னு நான் கண்டுபுடிக்கறேன். இப்பவே தலைமையகத்துல பேசுறேன். ரெண்டு நாளைக்கு வேலைய நிறுத்தி வெக்கச் சொல்லு. அவன் வந்ததும் கண்டின்யூ பண்ணிக்கிறலாம்.''

''சரிண்ணே. ஆனா நீங்க எதும் தப்பா எடுத்துக்கக் கூடாது. உங்கள நாங்க கடவுளாத்தான் நெனைக்கறோம். இப்ப தோணுது. அவர் செய்யிறேன்னு வந்தபோது அண்ணனாண்ட ஒருவார்த்த கேட்டுடுங்கன்னு சொல்லியிருக்கணும்.''

''பரவால்ல, விடுய்யா. ஏளபாளைங்க நீங்க என்னா பண்ணுவீங்க? உங்கள வெச்சி அவன் பெரியாளாவ முயற்சி பண்ணுறான். அது உங்களுக்குப் புரிஞ்சா சரி.''

''புரியுதுண்ணே. கண்டிப்பா நான் எங்க குப்பத்து ஆளுங்களக் கூப்ட்டு எல்லா விசயத்தையும் புட்டுப்புட்டு வெக்கத்தான் போறேன்.''

எம்.எல்.ஏ. சில வினாடிகள் ஆழமாக யோசித்தார். சட்டென்று, ''நீ ஒரு காரியம் பண்றியா? இன்னிக்கி நைட்டு கெளம்பி பாளையங்கோட்டை போறியா? ஒரு முக்கிய ஜோலி இருக்குது.''

''சொல்லுங்கண்ணே.''

''ஒரு ஃபைலு தரேன். அதைக் கொண்ட்டுபோயி அங்க மாவட்டச் செயலாளராண்ட குடுக்கணும். கொஞ்சம் அவசரம். நீதான் நம்பகமான ஆளு; நம்மாளு வேற. என்னா சொல்ற?''

''என்னண்ணே இப்பிடி கேக்கறீங்க? உங்க நெழல்ல வளர நாங்கள்லாம் குடுத்து வெச்சிருக்கணும்னே.''

''சரி, இரு. எடுத்தாரச் சொல்றேன். ஆனா ஒண்ணு. நீ பாளையங்கோட்டை போனன்னு சிங்காரத்துக்குத் தெரியணும். எதுக்குப் போனன்னு கேட்டான்னா மட்டும் சொல்லாத. சரியா?''

முத்துராமன் குழம்பினான். ஆனால், ஏதோ விவகாரம் என்பது மட்டும் புரிந்தது.

*(தொடரும்)*



# இளமை...

டாக்டர் ஆனா கலாஸ். அட்லாண்டாவில் ஒரு குட்டி க்ளீனிக் வைத்திருக்கிறார். மிகவும் பொறுமைசாலி. ஒரு நடை ஃப்ளைட் பிடித்துப் போய்ப் பாருங்கள். உட்கார வைத்து நான்கு மணி நேரம் பேசுவார். கதையடிப்பார். ஜோக் சொல்வார். கையைப் பிடித்துக் கிள்ளிவிட்டு, உங்களோடு சேர்ந்து விழுந்து விழுந்து சிரிப்பார். அத்தனை வெகுளி.

இவரது கன்சல்டேஷன் ஃபீஸ் 2250 அமெரிக்க டாலர்கள் மட்டுமே. நம்மூர் மதிப்புக்கு 1,80,000 ரூபாய். முதல் தடவை மட்டும்தான் இவ்வளவு... போகப்போக குறைத்துவிடுவார்கள். மிதமிஞ்சிய அக்கறை எடுத்துக் கொண்டு கவனிப்பார்கள்.

மாதத்துக்கு ஒருமுறை டாக்டர் கலாஸின் உதவியாளர் உங்களைத் தொடர்பு கொள்வார். நன்றாக இருக்கிறீர்களா? வேளா வேளைக்குச் சாப்பிடுகிறீர்களா? உபாதைகள் எதுவும் இல்லையே? நல்லது. தொலைபேசியை வைத்துவிடுவார்கள். பிறகு, மூன்று மாதங்களுக்கு ஒருமுறை, ஓர் ஆள் வருவார். கொஞ்சம் ரத்தம் கொண்டு போவார், பரிசோதனைக்காக. அதற்குக் கொஞ்சூண்டு சார்ஜ் போடுவார்கள். மற்றபடி, எந்தச் சந்தேகம் இருந்தாலும் டாக்டர் கலாஸைத் தொடர்பு கொள்ளலாம். ஃபோன் செய்யலாம். எஸ்.எம்.எஸ். அனுப்பலாம். ஈமெயில் அனுப்பலாம்.

ஆனா கலாஸின் பணி என்ன தெரியுமா? அவரைத் தேடி வருபவர்கள் என்றென்றும் இளமையாக இருக்கும்படி பார்த்துக்கொள்வதுதான். நரை முடி தோன்றாமல், தோல் சுருங்காமல் பார்வைக் கோளாறு ஏற்படாமல், சர்க்கரை நோய், காபிப் பொடி நோய் எதுவும் அண்டாமல் பார்த்துக்கொள்வது. வயது நாற்பது, நாற்பத்தைந்து ஆகிவிட்டாலும் இப்போதுதான் காலேஜிலிருந்து வெளியே வந்த தோற்றத்தை அவர்களுக்கு ஏற்படுத்துவது. தவிரவும், அவர்கள் சராசரி வாழ்நாளை அதிகரிப்பது.

காலம் காலமாக மனிதர்களுக்கு இருந்து வரும் ஆசைதான். பைபிளில், ராமாயணத்தில், புராணங்களில் வருவதுபோல் ஒருவர் 200, 300 ஆண்டுகள் வாழ முடியுமா? இப்போதெல்லாம் நாற்பதிலேயே தலை நரைத்து, உடல் சோர்ந்து விடுகிறது. ஆகவே, அறிவியல் தேவதையிடமிருந்து கூடுதல் ஆயுளைப் பிரார்த்திக்கிறார்கள்.

American Academy of Anti - Aging Medicine (A4m) என்னும் பெயரில் ஒரு தனி ஆராய்ச்சிப் படை அமெரிக்காவில்

இயங்கிக் கொண்டிருக்கிறது. 'உங்கள் ஆராய்ச்சியில் என்னையும் சேர்த்துக் கொள்ளுங்கள்' என்று விண்ணப்பித்து கிட்டத்தட்ட 19,000 பேர் உலகெங்கிலும் இருந்து இவர்களுக்குக் கடிதம் போட்டிருக்கிறார்களாம்.

இவர்களைப் பொருத்த அளவில் ஒருவருக்கு வயது அதிகரிப்பதன் காரணம் இயற்கை அல்ல. சம்பந்தப்பட்ட நபரின் உடல் அமைப்பு, தகுந்த மாத்திரை மருந்துகளால் அதைத் தடை செய்ய முடியும். கெட்டி ஆயுள் கிடைக்க வழி செய்யவும் முடியும்.

அதனால்தான் ஆனா கஸாஸ் போன்ற மருத்துவர்களை நோக்கிப் படையெடுக்கும் கூட்டம் குறைவதே இல்லை. 'இப்படி இருக்கும் நீங்கள் இப்படி ஆக வேண்டுமா?' என்று இரண்டு படங்களை அருகருகே போட்டு இளைஞர்களை, இளைஞிகளை ஈர்க்கும் விளம்பரங்கள் வந்துகொண்டே இருக்கின்றன.

க்ரீம்கள், லிப்ஸ்டிக், ஷாம்பூ, சோப் என்று லாண்டரி பில் போல் பட்டியல் நீள்கிறது. 'இதைத் தடவுங்கள் இருபது வயது குறையும். அதைத் தடவுங்கள் ஐம்பது வயது குறையும்' என்று கண்டதைத் தடவச் சொல்லி பிரபலங்கள் கொஞ்சுகிறார்கள்.

இதுபோன்ற அழகு க்ரீம்களில் தவறாமல் இடம் பிடிக்கும் ஒரு பொருள் DMAE (முழுப்பெயரை பிராக்கெட்டில் போட்டு இம்சிப்பது மகா பாவம்). இந்த வஸ்து வயதைக் குறைக்கிறதா என்பதை யாரும் ஊர்ஜிதப்படுத்தவில்லை. ஆனால், பாதிப்புகள் அதிகம் என்பதை அழுத்தம்திருத்தமாகச் சொல்கிறார்கள். தோலிலுள்ள செல்கள் உப்பி, பெருகி, மெடிக்கல்

» மருதன் «

டெர்மிஜாலஜியில் என்னென்னவோ ஆகி, கடைசியில் குட்டிச் சுவராகிவிடும். பிரிட்டனில் ஒரு பத்திரிகையே தொடங்கியிருக்கிறார்கள். என்னவெல்லாம் செய்தால் இளமையாக இருக்கலாம் என்பதைப் படம் போட்டுச் சொல்லிக் கொடுக்க.

இன்னொரு விஷயம், பிறந்த தேதியை வைத்து வயதைக் கணக்கிடுவது ஓல்டு ஃபேஷனாம். உடல் ஆரோக்கியத்தை வைத்துத்தான் ஒருவருக்கு இத்தனை வயது என்று சொல்ல வேண்டுமாம்.

உங்கள் உண்மையான வயது நாற்பத்தைந்தாக இருக்கலாம். ஆனால், அதை அப்படியே தேதி தவறாமல் சொல்ல வேண்டும் என்று அவசியமில்லை. பத்தொன்பது அல்லது பத்தொன்பதே முக்கால் என்று சொல்லிக்கொள்ளலாம். கேட்டால், 'மனத்தளவில் நான் ஒரு குழந்தை' என்று சொல்லலாம். சரி, எதற்காக வயதை மறைக்க வேண்டும் என்று அப்பாவித்தனமாக கேட்பவர்களின் வயது, இரண்டே முக்கால் மட்டுமே. ○

# ...ஊஞ்சலாடுகிறது!



## PROVOKED

பிரிட்டனில் எடுக்கப்பட்ட ஆங்கிலப் படம். என்றாலும் இந்திய நெடி அதிகம். கதாநாயகி ஐஸ்வர்யாராய். இசை ஏ.ஆர்.ரஹ்மான். ஒளிப்பதிவு மது அம்பட். இயக்கம் ஜக்மோகன் முந்த்ரா.

தொடக்கமே 'ஜில்'லென்று சூடுபிடிக்கிறது. இலண்டன் நகரில் உள்ள குடியிருப்புப் பகுதியின் மாடியில் வசிக்கும் ஒருவனின் படுக்கை தீப்பிடிக்கிறது. உடலெல்லாம் நெருப்பு படர, மேலிருந்து கீழே விழுகிறான். மருத்துவமனையில் போலீஸ் வினவ, "அந்த ராட்சஸிதான் என்னைக் கொன்றாள்" என்கிறான். அந்த ராட்சஸி? அவன் மனைவி. கிரண் அலுவாலியா.

இதைத் தொடர்ந்து கிரண் கைது செய்யப்பட்டு, சிறைக்கு அனுப்பப்படுகிறாள்.

"சிறையில்தான் நான் சுதந்திரமாக உணர்கிறேன்" என்று அவள் கூற, வழக்கறிஞருக்கு வியப்பு. மெள்ள மெள்ள அவள் கடந்த பத்து வருடங்களாக அனுபவித்த சித்ரவதைகள் விரிகின்றன.

'தெற்காசிய கறுப்பர் இனச் சகோதரிகள்' என்ற அமைப்பைச் சேர்ந்தவர்கள் கிரண் விடுதலைக்காக முயற்சி எடுக்கிறார்கள். கிரணின் சிறைத் தோழியின் சகோதரர் ஒரு பிரபல வழக்கறிஞர். அவர் உதவியுடன் நீதிமன்றத்தில் மேல் தீர்ப்புக்கு முறையிடுகிறார்கள். 'ப்ரவோகேஷன்' என்பதற்குப் புதிய அர்த்தம் வழங்கப்பட்டு, தீர்ப்பு வழங்கப்படுகிறது. கிரண் விடுதலையாகிறாள்.

கிரணாக ஐஸ்வர்யாராய் முயற்சி எடுத்து நன்றாகவே நடித்திருக்கிறார். கிரண் விடுதலைக்காகப் பாடுபடும் இயக்கத்தைச் சேர்ந்தவராக 'அழகி' நந்திதாதாஸ். கொடுத்த பாத்திரத்துக்கு நீதி செய்கிறார். என்றாலும் நடிப்பில் அதிகம்

## அற்புதத் தீவு

மலையாள இயக்குநர் வினயனோட கைவண்ணத்துல குள்ளர்கள் ராஜ்ஜியம் பிரம்மாண்டமா நம்மை வரவேற்குது. ரவிவர்மா ஓவியம் மாதிரி அழகான கற்பனை. மோனலிசா புன்னகை மாதிரி அர்த்தமுள்ள திரைக்கதைன்னு நல்லதொரு பதிவு. உயரமான மனிதர்களையே பார்த்தறியாத குள்ளர்கள் உலகம். சில உற்சாக மனிதர்கள் ஒரு பிரச்னையால அங்க ஊடுருவுறாங்க... இதனால உண்டாகிற காதல், மோதல், கலாட்டாக்கள்னு சுவாரஸ்யமா நகருது படம்.

பிரமாதப்படுத்துறார் அப்பாவித்தனமான பிருத்விராஜ். அவரோட திருட்டு முழி பக்கா பாக்யராஜ் டைப். குள்ளனா வேஷம் போட்டுட்டு அவர் பண்ற அலம்பல் அசத்தல் ரகம். காதலோட வேதனையை முகத்துல நல்லா வெளிப்படுத்தி இருக்கார். அப்பத்தான் பூத்த பூ மாதிரி இருக்குற மல்லிகா கபூர் தேறிட்டாங்க. பிருத்விக்காக உருகும்போது இயல்பான நடிப்பு இதயம் வருடுது. 'டிஷ்யூம்'ல காமெடியனா வந்த பக்ருவா இது? செம மெரட்டு மெரட்டறார். அவரோட சேட்டையும் வேட்டையும் கோட்டை தொட்டு, கொடி நாட்டுது! அவர் காதலிய விட்டுக் கொடுத்துட்டு உருகும்போது, சீரியல் பார்க்காதவங்களும் கலங்கிடுவாங்க.

மன்னரா வர்ற மணிவண்ணன், மரியாதைக்குரிய அண்ணன். தான் எல்லாருக்கும் சீனியருன்றத சிலிர்க்க வச்சு சொல்றார். கருணாஸ், வையாபுரி, ரெண்டு பேரும் இம்சை அரசர்கள்.. பயப்பட வேண்டாம்... இம்சை இனிமையாத்தான் இருக்கு.




ஸ்கோர் செய்வது ஐஸ்வர்யாவின் சிறைத் தோழியாக வரும் மிராண்டா ரிச்சர்ட்சனும், சாடிஸ்ட் கணவனாக வரும் நவீன் ஆன்ட்ரூஸும்தான்.

தடையில்லாமல் படம் செல்கிறது. இசையும், ஒளிப்பதிவும் தனித்து, கவனத்தை ஈர்க்காத அளவில் படத்தோடு இணைந்துள்ளன. ஒரு த்ரில்லரின் சுவாரஸ்யமும் இல்லை. பெண்ணுரிமையை முரசடித்தும் தெரிவிக்கவில்லை. என்றாலும் படம் நிற்கிறது என்றால், அது உண்மைக் கதையிலிருந்து நெய்யப்பட்டது என்பதனால்தான்.

**- ஜி.எஸ்.எஸ்.**

ஜெயச்சந்திரன் இசையில பாடல்கள் எல்லாம் கலகல டைப். ஷாஜியோட ஒளிப்பதிவுல தரமிருக்கு. தெளிந்த நீரோடை மாதிரி எந்தத் தடங்கலுமில்லாம இயக்கியிருக்கிற வினயனுக்கு 'ஜே' போடலாம். 'நோ வாஜிக், நிறைய மேஜிக்'னு சிரிக்க வைக்கற இந்தப் படம், கோடை விடுமுறைக்கு குழந்தைகளுக்கேற்ற கொண்டாட்டம்.

**- லஜ்ஜாவதி**





15

# சாஃப்ட்வேர் டாக்டர்!

இன்றைக்கு நாம் விண்டோஸை 'சூப்பர் ஹிட்' படைப்பாகக் கொண்டாடுகிறோம். ஆனால், ஆரம்ப காலத்தில் விண்டோஸின் முதல் இரண்டு வடிவங்கள் மிகச் சுமாராகவே இருந்தன. மக்கள் தொடக்கத்தில் வியப்போடு பார்த்தார்களே தவிர, அவற்றில் பெரிதாக ஒன்றும் இல்லை என்று புரிந்துகொண்டு விட்டார்கள். ஆகவே, விற்பனையும் இல்லை, லாபமும் இல்லை.

ஆனாலும் 'சாஃப்ட்வேர் டாக்டர்' பில் கேட்ஸுக்கு அதில் சம்மதம் இல்லை. 'விண்டோஸ்தான் நம்முடைய கம்ப்யூட்டர் துறையினுடைய எதிர்காலம்' என்று அழுத்தம் திருத்தமாகச் சொன்னார்.

1990ஆம் ஆண்டு வெளியான இந்த 'விண்டோஸ் 3'தான், பில் கேட்ஸின் இந்தக் கனவை நிஜமாக்கியது. வெளியான வேகத்தில் மிகப் பிரபலமடைந்து, உலக கம்ப்யூட்டர்கள் பெரும்பாலானவற்றில் மைக்ரோசாஃப்டின் முத்திரையை அழுத்தமாகப் பதித்தது.

இந்த மூன்றாவது விண்டோஸில் மட்டும் அப்படி என்ன விசேஷம்?

ஆரம்ப காலத்தில், டாஸ் பின்புலத்தை அப்படியே வைத்துக்கொண்டு, அதன்மீது விண்டோஸை இலேசாகத் தெளித்தால் மட்டும் போதும் என்றுதான் கணக்குப் போட்டிருந்தது, மைக்ரோசாஃப்ட். ஆனால், அது கம்ப்யூட்டர் பயனாளர்களுக்குப் போதவில்லை என்று புரிந்துகொண்ட பிறகு, பில் கேட்ஸ் தன்னுடைய திட்

டத்தை முற்றிலுமாக மாற்றியமைத்து விட்டார்.

பில் கேட்ஸுக்கு வசதியாக, இந்தக் காலகட்டத்தில் அதிவிரைவாகச் செயல்படக்கூடிய, கஷ்டமான விஷயங்களைக்கூட எளிதில் செய்து முடிக்கக்கூடிய, ஆனால் மிக மலிவான ஹார்ட்வேர் கிடைத்தது. கணினித் திரையில் வண்ணமயமாக என்னென்னவோ மாயாஜாலங்கள் காட்டுவதற்கான சாத்தியங்கள் உருவாகியிருந்தன. கூப்பிடு தூரத்தில் கணினியைப் பேச, பாட, ஆடவைக்கும் 'மல்ட்டி மீடியா' தொழில்நுட்பங்களும் வந்துகொண்டிருந்தன.

விண்டோஸின் சமீபத்திய வடிவம், இந்தத் தொழில்நுட்பங்கள் அனைத்தையும் பொருத்தமான வகையில் பயன்படுத்திக் கொண்டது. கூடவே, முந்தைய வடிவங்களில் இருந்த குறைகளைச் சரிசெய்து வைத்தார்கள்.

இது தவிர, அன்றைக்குச் சந்தையில் என்னவெல்லாம் முக்கியமான சாஃப்ட்வேர்கள் இருந்தனவோ, அவற்றையெல்லாம் தேடிப் பிடித்து விண்டோஸில் இயங்க வைத்தார்கள்.

நிறைய பணமும், புது விஷயங்களில் அளவற்ற ஆர்வமும் கொண்டிருந்த இளைய தலைமுறை கம்ப்யூட்டர் பயனாளர்களிடையே, 'விண்டோஸ் 3' பெரிய வெற்றியடைந்தது. மைக்ரோசாஃப்ட் போட்டு வைத்திருந்த விற்பனைக் கணக்குகள் எல்லாவற்றையும் உடைத்து எறிந்துவிட்டு, பணம் மில்லியன்களாகக் குவியத் தொடங்கியது.

ஆனால், ஆரம்பகால விண்டோஸ் கணினிகளில், தெரியாத்தனமாக ஒரே நேரத்தில் ஏழெட்டு 'விண்டோ'க்களைத் திறந்துவிட்டால் போச்சு... காக்கி கவரின்மீது அஞ்சு பைசா ஸ்டாம்ப்களை அருகருகே நெருக்கியடித்து ஒட்டினாற்போல, நாம் திறந்த எல்லா ஜன்னல்களும் ஒன்றுக்குப் பக்கத்தில் இன்னொன்றாகத் திரையை நிரப்பிவிடும்.

இப்படி ஒரே நேரத்தில் ஏகப்பட்ட விண்டோக்களைப் பார்த்த பலருக்கு,

## » என்.சொக்கன் «

ஒன்று கண் வலித்தது, அல்லது தலை வலித்தது. ஆகவே, 'இதற்கு ஏதாவது செய்யக்கூடாதா?' என்று மைக்ரோசாஃப்டைக் கேட்டுக்கொண்டார்கள்.

இதன்படி, 1988 ஜனவரியில் வெளியான 'விண்டோஸ் 2.03' வடிவத்தில் ஒரு சிறிய மாற்றம் செய்யப்பட்டிருந்தது. அடுத்தடுத்து திறக்கிற ஜன்னல்கள் ஒன்றின் பக்கத்தில் இன்னொன்றாக இடத்தை அடைத்துக் கண்ணை உறுத்தாமல், ஒன்றுக்குப் பின் ஒன்றாக வரிசையில் நின்றன. பார்ப்பதற்கும் அழகு, பயன்படுத்துவதற்கும் வசதி.

இன்றைய கணினிகளில் இருக்கும் சவுகர்யங்களோடு ஒப்பிடுகையில், இது மிகச் சாதாரணமான ஒரு விஷயம். ஆனால், சில ஆண்டுகளுக்கு முன்புவரை 'டாஸ்' திரைகளில் தட்டித் தட்டி ஓய்ந்து போயிருந்த அன்றைய கம்ப்யூட்டர்காரர்களுக்கு, இந்தச் சின்ன கூடுதல் வசதி மிகப்பெரிய வரப்பிரசாதமாகத் தெரிந்தது.

இதனால், ஏற்கெனவே புகழின் உச்சியில் ஏறிக்கொண்டிருந்த மைக்ரோசாஃப்ட், இப்போது மேலும் பிரபலமாகிவிட்டது. கம்ப்யூட்டர் பயன்படுத்துபவருக்கு எந்தத் தொந்தரவும் தராமல், அழகழகாக ஜன்னல்களைப் பின்னணியில் படிய வைத்து அடுக்கியது விண்டோஸ். இதைப் பார்த்தவர்களெல்லாம் 'ச்சோ ச்வீட்' என்று செல்லம் கொஞ்சி திருஷ்டி கழிக்காத குறைதான்.

இனிமேல் விண்டோஸின் விற்பனை கண்டபடி எகிறப்போகிறது என்று அவர்கள் சந்தோஷப்பட்டுக்கொண்டிருக்கையில், அவர்கள் முகத்தில் ஓர் அழுகிய ஆப்பிள் வந்து விழுந்தது.

(தொடரும்)

ஒரு சலவைத் தொழிலாளியின் மனைவியாள் "கங்காதரா! மாண்டாயோ?" என்று சொல்லிப் பிலாக்கணம் வைத்து அழுது கொண்டிருந்தாள். சற்று நேரத்துக்கெல்லாம் ஊரே திரண்டு விட்டது. ஸ்திரீகள் கட்டிக் கொண்டு அழுதார்கள். கொஞ்ச நேரம் கழித்து அழுகைச் சத்தம் சற்று ஓய்ந்ததும் "கங்காதரன் என்பது யார்? அவர் எதனால் மாண்டார்?" என்று ஒருவர் இன்னொருவரிடம் விசாரித்தார். "எனக்குத் தெரியாது. அழுகைச் சத்தம் கேட்டதும் வந்தேன்!" என்று பதில் சொன்னார் பக்கத்திலிருந்தவர். இப்படி ஒருவருக்கு ஒருவர் விசாரித்து ஒன்றும் தெரியாமல் போகவே, கடைசியில் கங்காதரனைப் பறிகொடுத்த சலவைத் தொழிலாளியின் மனைவியிடமே கேட்டார்கள். கங்காதரன் என்பது அவள் வீட்டில் பொதி சுமந்து வந்த ஆண் கழுதையின் பெயராம்!

# கங்காதரா! மாண்டாயோ?



மேற்படி கங்காதரன் கதைக்கு எந்தவிதத்திலும் குறைச்சல் இல்லாமல், சென்ற வாரத்தில் ஐந்து தினங்கள் சென்னை மாநகரில் ஓர் அதிசயம் நடந்து வந்தது. சென்னை சேப்பாக்கத்தில் ஒரு விஸ்தாரமான மைதானம் இருக்கிறது.

கிரிக்கெட் விளையாட்டைப் பார்ப்பதற்காகவென்று சுமார் முப்பதினாயிரம் புத்திசாலிகள் அந்த சேப்பாக்கம் மைதானத்திலே கூடினார்கள். முப்பதினாயிரத்து ஒன்றாவது புத்திசாலியாக அடியேனும் அந்த சேப்பாக்கம் மைதானத்துக்குப் போய் வந்த சேதியைப் பகலுகிறேன் கேளுங்கள்...

நாங்கள் ஐந்து பேர் அதிகாலையில் கொட்டும் கடும் பனியையும் லட்சியம் செய்யாமல், ஐந்து மணிக்கே எழுந்திருந்து பஸ் ஸ்டாண்டில் வந்து காத்திருந்து, க்யூ வரிசையில் நின்று பஸ்ஸைப் பிடித்து சேப்பாக்கம் மைதானத்துக்குச் சென்றோம். 'க்யூ' வரிசையில் மணிக்கணக்காகக் காத்திருந்து டிக்கெட்டை வாங்கினோம். பிறகு கிரிக்கெட் மைதானத்துக்குள் நுழைவதற்காக நீளமாக நின்றுகொண்டிருந்த 'க்யூ' வரிசையில் நீண்ட நேரம் காத்திருந்த பிறகு, விளையாட்டு மைதானத்துக்குள் பிரவேசித்தோம்.

பன்னிரண்டணாவிலிருந்து பத்து ரூபாய் வரை பணத்தைக் கொடுத்துவிட்டு வேகாத வெயிலிலே நாற்காலியிலும் காலரியிலுமாக ஆயிரக்கணக்கானவர்கள் உட்கார்ந்திருந்தார்கள். ஒரு சில நூறு பேர்களைத் தவிர மற்றவர்கள் எல்லாரும் வெயிலிலே வாடி வதங்கிக் கொண்டிருந்தார்கள். அப்படி வாடி வதங்கியவர்களில் குழந்தைகளும் பெண்களும்கூட உண்டு.

ஒரு தடவை காலரியில் இருப்பவர்களுக்கும் தரையில் உட்கார்ந்திருப்பவர்களுக்கும் தகராறு ஏற்பட்டு விட்டது. இதில் ஒருவருக்குக் காயம் ஏற்பட்டு விடவே அவரை ஆஸ்பத்திரிக்குத் தூக்கிக்கொண்டு போனார்கள். காலரியில் இன்னொரு பக்கத்தில் வெயில் தாங்காமல் ஒருவர் மயக்கம் போட்டு

விழுந்து விட்டார். இதையெல்லாம் பார்க்கச் சகிக்காமல் மைதானத்தை விட்டு வெளியில் கிளம்பி வந்தேன். என்னைப் போலவே வெளிவந்த சுமார் பத்துப் பதினைந்து பேர் கிரிக்கெட்டைப் பற்றி வாதப் பிரதிவாதங்கள் செய்துகொண்டிருந்தனர்.

"கிரிக்கெட் மாட்சுக்கு வரவில்லை என்றால் நாலு பேர் கேலி செய்யப் போகிறார்களே என்பதற்காக வந்து தொலைந்தேன்!" என்றார் ஒருவர்.





"மதுரையிலிருந்து என் நண்பர் ஒருவர் வந்திருக்கிறார்; அவருக்காக நான் வந்தேன்" என்றார் இன்னொருவர்.

"சொல்ல வெட்கமாக இருக்கிறது! இவ்வளவு ஆயிரம் பேர் வருகிறார்களே, ஏதாவது விசேஷம் இல்லாமலா போகும் என்று நான் வந்தேன்!" என்று அசடு வழியச் சொன்னார் ஒரு புஷ்கோட் ஆசாமி.

எனக்கு முன்னால் சென்றவர்களில் ஒருவர் "ஏன் ஐயா! இந்த ஆட்டத்தின் ஸ்கோர் நம்பரை சாயங்காலப் பத்திரிகையில் படித்துத் தெரிந்துகொள்ளலாமே? பணம் போனால் போகிறது! மத்தியானம் ஆட்டத்துக்கு வர வேண்டாம்" என்று கெஞ்சினார்.

"சுத்தப் பட்டிக்காடு மாதிரி பேசுகிறாயே? கிரிக்கெட் என்பது 'ராயல் கேம்' அல்லவா? அதைப் பார்க்காத ஜன்மம் ஒரு ஜன்மமா?" என்று பதில் சொன்னார் அவர் நண்பர்.

"இந்த ஆட்டத்தைப் பற்றி இந்தியாவின் வைஸ்ராயாக இருந்த ஜெனரல் வேவல் என்ன சொல்லியிருக்கிறார், தெரியுமா? 'அருமையான காலத்தையும் அற்புதமான மனித சக்தியையும் நாசம் செய்வது கிரிக்கெட் விளையாட்டு!' என்று சொல்லியிருக்கிறார்" என்றார் ஒரு ஜிப்பாக்கார ஆசாமி.

"அது மட்டுமா? பெர்னாட்ஷா என்ன சொல்லியிருக்கிறார், தெரியுமா? 'பதினொரு தடித் தாண்டவராயன்கள் பந்தை எறிந்து பிடித்துக் கொண்டிருப்பது. இந்த வேடிக்கையைப் பதினாயிரம் சோம்பேறிகள் பார்த்துக் கொண்டிருப்பது' என்று வெளுத்து வாங்கியிருக்கிறார்!" என்றார் இன்னொருவர்.

"அந்நிய ஆட்சியினால் நமக்கு ஏற்பட்ட பல கெடுதல்களில் இதுவும் ஒன்று" என்று ஒரு தேசபக்தர் சொல்லிக்கொண்டிருக்கும்போதே எல்லோருமாக காஃபி ஹோட்டலுக்குள் நுழைந்துவிட்டார்கள்.

முப்பதினாயிரம் பேர் பணம் கொடுத்து விட்டு சேப்பாக்கம் விளையாட்டு மைதானத்தில் கூடுகிறார்களே என்றால், 'கங்காதரா! மாண்டாயோ?' கதையைத்தான் ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டியிருக்கிறது.

**- பிப்ரவரி 6, 1949**

**கல்கி இதழிலிருந்து...**

27

# தேவை மருந்து

''தினமும் ராத்திரி படுக்கையை நனைக்கிறியே! இதே வேலையாப் போச்சு, இத்தனை தூரம் வளர்ந்தும் படுக்கையில பாத்ரூம் போகக் கூடாதுங்குற புத்தி மட்டும் வரவே மாட்டேங்குது'' என்று புலம்புகிற அம்மாக்கள் இந்தப் பக்கங்களைத் தவறாமல் படியுங்கள்!



நான்கு வயதுக் குழந்தைகளுள் முப்பது சதவிகிதத்தினருக்கு இப் பிரச்னை இருக்கிறது. ஆறு வயதுவரை இதில் கட்டுப்பாடு அடையாமல் இருக்கும் குழந்தைகள் பத்து சதவிகிதத்தினர். அபூர்வமாக மூன்று சதவிகிதம் குழந்தைகளுக்குப் பன்னிரண்டு வயதாகும் வரை பிரச்னை நீடிக்கிறது. இப் பிரச்னை பெண் குழந்தைகளைவிட ஆண் குழந்தைகளிடம்தான் அதிகம் காணப்படுகிறது. இதற்குக் காரணம், பஸ்தி எனப்படும் மூத்திரப் பையை இயக்கும் நரம்புகள் பலப்படுவது மெதுவாக இருப்பதுதான். இதனால் சிறுநீர்ப்பை நிரம்பும்போது இக்குழந்தைகள் எழுந்துபோய் சிறுநீர் கழிக்கத் தவறிவிடுகின்றன.

இரவில் ஏதேனும் கனவுகள் கண்டால் கூட படுக்கையில் சிறுநீர் போவோர் உண்டு. மிகச் சிறிய அளவினருக்குச் சிறுநீர்ப்பை அழற்சியினாலும், சர்க்கரை நோயினாலும் இப் பிரச்னை ஏற்படுவதுண்டு. மனரீதியாக ஏற்படும் பாதிப்புகளினாலும் இரவில் குழந்தைகள் சிறுநீர் கழிப்பதுண்டு. சில நேரங்களில் இந்தப் பழக்கம் நின்றுபோய், ஓர் இடைவெளிக்குப் பிறகு மீண்டும் தொடரும். இப் பிரச்னை ஓரளவு வளர்ந்த குழந்தைகளுக்கு வந்தால், அக் குழந்தையிடமும், அதன் பெற்றோர்களிடமும் இது பொதுவாக ஏற்படக்கூடிய பிரச்னை என்று சொல்லிப் புரியவைக்க வேண்டும். சற்று வளர்ந்த குழந்தையாக இருப்பின், இரவு நேரங்களில் அதிகமான திரவ உணவுகள் உட்கொள்வதைத் தவிர்க்க வேண்டும். காஃபி, டீ குடிப்பதைத் தவிர்த்தல் நலம். குழந்தை இரவு படுக்கைக்குச் செல்லுமுன் கட்டாயம் சிறுநீர் கழித்துவிட்டுத்தான் படுக்க வேண்டும் என்ற பழக்கத்தை ஏற்படுத்த வேண்டும்.

குழந்தை படுக்கையில் சிறுநீர் போய்விட்டால் உடனே துணியை மாற்ற வேண்டும்; இல்லாவிடில் சொறி, சிரங்கு, அரிப்பு போன்ற பிரச்னைகள் வரும். இம்மாதிரியான பிரச்னைகளுக்குக் குழந்தைகளிடம் மனரீதியாகத்தான் அணுக வேண்டும். படுக்கையில் சிறுநீர் போவதால் ஏற்படும்

பிரச்னைகளைச் சொல்லி விளங்க வைக்க வேண்டும். இப்படிப் புரியவைத்தபின் குழந்தை படுக்கையில் போகவில்லை என்றால், அதனைக் கட்டாயம் பாராட்ட வேண்டும்.

ஆறு வயதுக்கு மேலான குழந்தைகள் என்றால், இரவு படுக்கைக்குப் போகும் 2 - 3 மணி நேரத்துக்கு முன்பு திரவ உணவு களைக் கொடுக்கக்கூடாது. குழந்தைக்கு ஏழு வயதான பின்பும் இப் பிரச்னை தொடர்ந்தால், கட்டாயம் சிகிச்சை அளிக்க வேண்டும். சிகிச்சையினால் 70 சதவிகிதம் பேருக்குப் பயன் விளைந்துள்ளது.

இம்மாதிரியான பிரச்னையுள்ள குழந்தைகளை எழுப்புவதற்கென்றே மேலை நாடுகளில் ஒலி எழுப்பும் அலாரங்கள் வந்துள்ளன. ஒரு துளி சிறுநீர் வெளியே வந்தாலே அலாரத்தில் ஒலி ஏற்படும். நமக்கு அதெல்லாம் சாத்தியப்படாது என்றாலும், இரவில் குழந்தையை எழுப்பி, சிறுநீர் போகச் செய்ய வேண்டும்.

சிறுநீர்ப்பையை நெகிழச் செய்து மூத்திர வாய்ப் பகுதியில் உள்ள Sphincterஐ இறுகச் செய்யும் மருந்துகள் உள்ளன.

ஆயுர்வேதத்தில் காச்யப சம்ஹிதையில் இந்தப் பிரச்னைக்கான மருத்துவம் குறிப் பிடப்பட்டுள்ளது.

# வளர்ந்தும் மாறாத பழக்கம்!

சிறுநீர் கபத்தன்மை உடையது. சிறு நீர்ப் பெருக்கம் அபான வாயுவின் இயக் கத்தால் ஏற்படுகிறது. இப் பிரச்னையை நரம்பு சம்பந்தமானதாகவும், மனரீதியாகவும் அணுக வேண்டும். அபான வாயு காரணம் என்பதால், அதனைச் சீர்ப்படுத்துகின்ற மருந்துகளைக் கொடுக்க வேண்டும். இதற்கு தன்வந்தரத் தைலத்தைத் தொப்புளுக்குக் கீழே தடவி, 20 நிமிடங்கள் கழித்துக் குளிக்க வைக்க வேண்டும். இது நல்ல பலனளிக்கும்.

இது Sphincter muscles என்ற சிறுநீர்ப் பையில் உள்ள தசைகளை வலுவுறச் செய்கிறது. ஸாரஸ்வதாரிஷ்டம் போன்வற் றில் பத்துத் துளி வஸ்தியாமயாந்தகம் என்னும் நெய்யைச் சேர்த்துக் கொடுக் கலாம். இப்படி அரிஷ்டத்தில் நெய் சேர்த்துக் கொடுப்பதற்கு ஸத்திய ஸ்நேகம் என்று பெயர். வஸ்தியாமயாந்தகம் என்னும் நெய்யில் ஒரு ஸ்பூன், இரவு உறங்கச் செல்லுமுன் கொடுக்க வேண்டும்.

குசம், தர்பைப்புல், கரும்பு போன்ற வற்றால் செய்யப்பட்ட த்ருணபஞ்ச மூலம் எனும் கஷாயத்தில் மஹா கல்யாணகம் என்னும் நெய் சேர்த்துக் கொடுப்பது நல்ல பலனைக் கொடுக்கும். இத்துடன் அஸ்வ கந்தா சூரணம் வஸந்த குஸுமா கரம், சிவகுளிகை போன்றவை மிக்க பலனளிக் கும். தலைக்கும் தளம் (மருந்துப் பொடி களைப் பசை போல் ஆக்கி, தலை உச்சியில் வைத்துக்கொள்வது) வைப்பது நன்மை பயக்கும்.

(தொடரும்)

**தன்வந்தரி டாலர் பரிசுப் போட்டி எண்.22**

உங்கள் குழந்தை படுக்கையில் சிறுநீர் கழித்தபோது, அதை நிறுத்த நீங்கள் கையாண்ட வழிமுறைகளையும், மருத்துவக் குறிப்புகளையும் எழுதி அனுப்புங்கள். சிறந்த குறிப்புக்கு முதல் பரிசாக தன்வந்தரி டாலர் பரிசளிக்கப்படும். இரண்டாவது பரிசாக டாக்டர் எல்.மஹாதேவனின் தேவ மருந்து முதல் பாகம் வழங்கப்படும்.

**ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.**

**கடைசி தேதி : 30.04.2007**

# அமெரிக்காவில் 'அலை ஓசை'!

சாகித்ய அகாதமி பரிசு பெற்ற முதல் தமிழ் நாவலான அமரர் கல்கியின் அலை ஓசை, அமெரிக்காவில் நாடக மேடை ஏறியிருக்கிறது. வாஷிங்டன் டி.சி.யில் நிறுவப்பட்டுள்ள சிவாஜி கணேசன் கலை மன்றத்தார், தமிழ்ப் புத்தாண்டுப் பிறப்பின்போது வாஷிங்டன் பகுதியில் உள்ள திருமுருகன் ஆலய மேடையில் முதன்முதலாக இந்த நாடகத்தை அரங்கேற்றினார்கள். பிற அமெரிக்க நகரங்களிலும் தமிழ்ச் சங்க அமைப்புகள் மூலமாகவோ அல்லது தமிழ் நண்பர்களின் உதவியுடனோ 'அலை ஓசை' நாடகம் மேடையேறும்.



* இயக்குநருடன் நாடகக் குழு...

எண்ணூறு பக்கங்களுக்கு மேலான இந்த நாவலை, இரண்டரை மணிகால நாடகமாக்கி அளிப்பதில் சவால்களும் பிரச்னைகளும் இல்லாமலில்லை. எந்தெந்தக் கதாபாத்திரங்களை எடுத்து, எந்தெந்த நிகழ்ச்சிகளைக் கோத்து நாடகத்தில் காட்சிகளாக அமைத்தால் கல்கியின் கதைக்குச் சிதைவு ஏற்படாமலிருக்கும் என்பதில் கவனமாக இருந்திருக்கிறோம். கதாசிரியரின் எழுத்து நடைக்கு எந்த வகையிலும் மாசு வரக்கூடாது என்று கருதி, அவர் எழுதிய வசன நடையையே பயன்படுத்தியுள்ளோம்.

'அலை ஓசை' நாடகத்தில் நடிப்பவர்கள் மொத்தம் பதினொரு பேர். ஒரு சிலருக்கு இரண்டு அல்லது மூன்று வேடங்கள்கூட உண்டு. இந்திய விடுதலைப் போராட்டப் பின்னணியில் அமைந்த கதை என்பதால் தேசிய இயக்கத்தையும், காந்தியத்தையும் இசையின் மூலமாகவும் சிற்சில இடங்களில் விளக்க உரையாகவும் ஊடுருவ விட்டுள்ளோம். எம்.எஸ்., டி.கே.பட்டம்மாள், எம்.கே. தியாகராஜ பாகவதர், கே.பி.சுந்தராம்பாள் போன்றோரின் அருமையான பாடல் வரிகளையும், சுமார் 60 ஆண்டுகளுக்கு முன் ஒலித்த பழம்பெரும் மெட்டுகளையும் நாடகத்துக்குப் பின்னணி இசையில் சேர்த்துள்ளோம். கதாநாயகி சீதாவின் மன ஓசைகளையும் இசையின் மூலமாக ரசிகர்கள் உணரும் அளவுக்கு ஸ்ரீகாந்த் தேவராஜன் 'தீம் மியூசிக்' அமைத்துள்ளார்.

மிகக் குறைவாக மேடை அமைப்பு செய்து, காட்சி மாற்றத்துக்கு ஒரு நிமிடத்துக்கு மேல் எடுத்துக்கொள்ளாமல் மேடை ஒளியைக் கவர்ச்சியாக அமைத்து, நாடகத்துக்கு விறுவிறுப்பு கூட்டியிருக்கிறோம். நடுநடுவே ஒரு நிமிடத்துக்கும் குறைவான, வசனமில்லாத சின்னச் சின்ன காட்சிகளையும் (விஷுவல்) அமைத்து, கதையைக் கோவையுடன் நகர்த்தியிருக்கிறோம்.

அலை ஓசையை நாடகமாக்கி இயக்குவது அடியேன். நாடகக் காட்சிகளையும் வசனங்களையும் எழுதுமுன் இரண்டு முறை கதையைப் படித்தேன்; எழுதி, ஒத்திகை ஆரம்பித்த பின் இரண்டு முறை படிக்க வேண்டியதாயிற்று. ஒவ்வொரு முறை படிக்கும்போது முக்கிய பாத்திரங்களைப் புதிதான கோணத்தில் காண்பதாகத் தோன்றியது. அமரர் கல்கியின் எழுத்துத் திறனுக்கு இது மகத்தான வெற்றியல்லவா?

அமரர் கல்கியின் நினைவுக்கு இந்த நாடகத்தைச் சமர்ப்பிப்பதில் சிவாஜி கணேசன் கலை மன்றத்தார் மிகவும் பெருமைப்படுகிறார்கள்.

**- வாஷிங்டன் ஸ்ரீதர்**

# தீ விபத்திலிருந்து பாதுகாக்க...



• கண்ணம்மா

“கும்பகோணம் தீ விபத்தை அவ்வளவு எளிதாக யாரும் மறந்துவிட முடியாது. இனி அப்படிப்பட்ட சம்பவங்கள் எங்கும் நடந்துவிடக் கூடாது என்பதில் நாம் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். முதல் முயற்சியாக, ஒவ்வொரு வீட்டிலும் தீயணைப்புக் கருவிகள் இருக்க வேண்டும். ஒவ்வொரு நபரும் தீ விபத்து குறித்த அறிவு பெற்றிருக்க வேண்டும்'' என்கிறார் கண்ணம்மா. 'ஆரோமா ஃபயர் ஃபைட்டிங் எக்யூப்மெண்ட்ஸ். மேனுபேக்சரிங் அண்ட் சர்வீசஸ்' நிறுவனத்தின் மூலம் தீ விபத்துகளைத் தடுக்கும் பயிற்சி வகுப்புகளை நடத்தி வரும் கண்ணம்மா, ''நம் மக்களிடையே இன்னும் தீ விபத்தைப் பற்றிப் போதிய விழிப்புணர்வு இல்லை'' என்று வருத்தப்படுகிறார்.

''நம் வாழ்வில் தவிர்க்க முடியாத விஷயம் தீ. ஆனால், அதனை முறை தவறியோ, அலட்சியமாகக் கையாண்டாலோ அது நம்மைத் தவியாய்த் தவிக்க வைத்துவிடும். பல துறைகளில் கொடிகட்டிப் பறப்போம். ஆனால், சின்ன கேஸ் கசிவினால் பெரும் ஆபத்தைச் சந்தித்து விடுவோம். இன்றைக்கும் தினசரிகளைத் திறந்தால் தினமொரு தீ விபத்துச் செய்தியை வாசிக்காமல் இருக்க முடியாது.

சென்னையையே எடுத்துக்கொண்டால், சுமார் இருபத்தைந்து தீயணைப்பு நிலையங்கள் தான் இருக்கின்றன. ஆனால், பல லட்சம் மக்கள் தொகைக்கு அவை போதுமானதாக இருக்காது. அரசாங்கத்தைக் குறை கூறிப் பயனில்லை. நாம்தான்



"சமையலறையில் ஃப்ரிட்ஜை வைக்கக் கூடாது. சின்ன தீப்பொறி பட்டால்கூட பெரிய ஆபத்து நிகழ்ந்துவிடும்!"



நம்மைப் பாதுகாத்திட வேண்டும். தொண்ணூறு வருஷப் பாரம்பரியம் கொண்ட ஒரு தீயணைப்பு நிறுவனத்தில் இருபது வருடங்கள் வேலை பார்த்தேன். எதிர்பாராதவிதமாக அந்த கம்பெனியை மூடிவிட்டார்கள். நான் கற்றுக்கொண்ட விஷயங்களை வீணாக்க விரும்பவில்லை. நானே சொந்தமாக ஒரு நிறுவனத்தை ஆரம்பித்து, 'சத்கர்மா' என்கிற அறக்கட்டளை மூலம் தீ விபத்தைப் பற்றிய விழிப்புணர்வு வகுப்புகளை நடத்தி வருகிறேன்'' என்கிற கண்ணம்மா, ''ஏபிசி எக்ஸ்டிங்க்விஷ் என்கிற கருவி, வீடு மற்றும் காரில் ஏற்படும் தீ விபத்தினைத் தடுக்கப் பெரிதும் உதவும்'' என்கிறார்.

பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள், அலுவலகங்கள், வீடுகள் போன்றவற்றில் எதிர்பாராமல் ஏற்பட்டுவிடும் தீ விபத்தைச் சமாளிக்க கண்ணம்மா கூறும் வழிகள்...

- தீ விபத்தைத் தடுக்கும் கருவிகள் குறித்த அறிவு அனைவருக்கும் இருக்க வேண்டும். குறிப்பாக அக் கருவிகளைக் கையாளத் தெரிந்திருக்க வேண்டும். வீடு, அலுவலகம், கல்லூரி, பள்ளி என்று எல்லா இடங்களிலும் தீயணைப்புக் கருவிகளை வாங்கி வைத்திருக்க வேண்டும்.
- இன்றைக்கு எதெதற்கோ வகுப்புகள் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். கட்டாயம் தீ விபத்துத் தடுக்கும் விழிப்புணர்வு வகுப்பை ஒவ்வோர் அபார்ட்மெண்ட், கல்லூரிகள், அலுவலகங்களில் அறிமுகப்படுத்த வேண்டும்.
- அறைக்குள் தீப்பிடித்துப் புகையுடன் இருந்தால், ஈரத் துணியால் முகத்தை மூடிக் குனிந்து அல்லது தவழ்ந்து அந்த ஈரக் காற்றைச் சுவாசித்துக் கொண்டு வெளியேற வேண்டும்.
- வெளியேற வழியில்லாத போது பாத்ரூம் ஷவர் பாத் போட்டுக்கொண்டு நிற்க வேண்டும்.
- சிலிண்டர் வாயில் தீ எரிகிறது. அணைக்க வழியில்லை என்றால், சிலிண்டரை ஈரக் கோணியில் சுற்றி சிலிண்டர் சூடாகாமல் பார்த்துக் கொள்ளவும்.
- சமையலறையில் ஃப்ரிட்ஜை வைக்கக்கூடாது. ஃப்ரிட்ஜ் பதினெட்டு மணி நேரம் தொடர்ந்து வேலை செய்யக்கூடியது. ஒரு சின்ன தீப்பொறி பட்டால்கூட பெரிய ஆபத்து நிகழ்ந்துவிடும். தவிர்க்க முடியாமல் சமையலறையில் வைக்க நேரிட்டாலும் சிலிண்டரை வெளியில் வைத்துவிட்டு ரெகுலேட்டர் மட்டும் கிச்சனில் வரும்படிப் பொருத்தலாம்.
- காலியாகாத - ஆனால் உபயோகத்தில் இல்லாத சிலிண்டரையும் உபயோகத்தில் உள்ள சிலிண்டரையும் ஒரே அறையில் வைக்கக் கூடாது.
- முக்கியமான ஆவணங்களை, தனி கவரில் போட்டுத் தயாராக வைத்துவிடலாம். தீ விபத்து ஏற்பட்டால் அவற்றை எடுத்துக்கொண்டு தப்பிப்பது சுலபமாக இருக்கும்.
- கேஸ் டியூப் கசிவுதான் பெரும்பாலான தீ விபத்துகளுக்குக் காரணம். நல்ல கம்பெனி டியூபை வாங்கிப் பயன்படுத்துவது அவசியம். அதைவிட முக்கியம், உபயோகிக்கும் டியூபை அவ்வப்போது பரிசோதித்துக் கொள்வது.
- தீ விபத்தைப் பற்றிக் கேள்விப்படும்போது மட்டும் 'உச்சு' கொட்டிவிட்டு அத்தோடு மறந்துவிடக் கூடாது. நமக்கும்கூட தீயினால் ஆபத்து வரக் கூடும் என்பதை ஒவ்வொருவரும் உணர்ந்து, நெருப்பிடம் எச்சரிக்கையாக நடந்து கொள்வது முக்கியமானது.

- ப்ரியா

✉ சிறுநீரகப் பிரச்னையால் அவதிப்படும் கால் சென்டர் பெண்களுக்கு மட்டுமின்றி எல்லோருக்கும் பேருதவியான மருத்துவக் கட்டுரை அருமை!
சென்னை - 17, கோபால ரங்கநாதன்

✉ பக்கத்துக்குப் பக்கம் பரிசுப் போட்டியா? அம்மாடியோவ்! வானத்துல பறக்கற மாதிரி இருக்குது!
தேனூர், ரூபாவதி சௌந்தர்ராஜன்

✉ புகைப்படப் போட்டியில் பரிசு பெற்ற எட்டுப் படங்களும் பேசும் காவியங்கள்!

# பேசும் காவியம்!



'மேக்கப்' இல்லாத முகங்கள் மிகவும் அழகானவை!
கும்பகோணம், ஜெகா

✉ 'இரேவதியைக் கேளுங்கள்' பகுதியில் விஷயமும் இருக்கும் போலிருக்கிறதே... கலக்குங்க!
கூத்தப்பாக்கம், மூர்த்தி

✉ 'ஆக்ஷன் ஸ்டார் ஜீவா'வின் 'டிஷ்யூம்' தொடர் அவரது படங்களைப் போல் த்ரில், ஆக்ஷன் நிறைந்து காணப்பட்டது.
லால்குடி, இராஜேந்திரன்

✉ 'நான் செல்ல வேண்டிய வாழ்க்கைப் பாதையில் முட்கள் இருந்தாலும் தாண்டிச் செல்லும் தைரியம் எனக்குண்டு' என்று தமது தொடரில் குறிப்பிட்டு, ஜீவா தன் தன்னம்பிக்கையையும், துணிச்சலையையும் வெளிப்படுத்தியுள்ளார்.
சென்னை - 93, எஸ்.சையது முகமது

✉ 'ஆக்ஷன் ஸ்டார் ஜீவா' வுடன் நேரிலேயே உரையாடுவதைப் போல வெகு அழகாகத் தொடரை வடிவமைத்திருந்தார் சந்திரமௌலி.
நெய்வேலி, சாந்தி சுந்தர்

✉ 'சிவாஜி' பட ரகசியங்கள் முற்றிலும் புதுசு கண்ணா புதுசு. பல பத்திரிகைகளிலும் வெளிவராத செய்தி.
சிதம்பரம், என்.காளிதாஸ்

✉ 'ஸ்ரீலலிதா' தொடர் மங்களம் பாட, மனமோ முகாரி பாட, 'வளம் தரும் கோயில்' புதிய தொடர் மீண்டும் மோகனம் பாட வைத்துவிட்டது!
ஸ்ரீரங்கம் கோபாலன், சென்னை

# 3 வளம் தரும் கோயில்

சீதா ரவி


* ராஜகோபுரம்

ஒரே ஒரு துளஸி தளத்தைத் தராசுத் தட்டில் வைத்தாள் ருக்மிணி; அது பகவான் கிருஷ்ணனுடைய எடைக்கு நிகராக நின்றது என்று புராணக் கதை கேட்டிருக்கிறோம். சகல உலகத்துக்கும் இணையாக தராசுத் தட்டில் ஒன்றை வைக்க வேண்டுமானால் அது என்னவாக இருக்க முடியும்...? திருமழிசை என்கிற திருத்தலத்துக்குப் போய் வந்தவர்கள் விடையைச் சரியாகச் சொல்வார்கள்.

மஹீஸார க்ஷேத்திரம் என்பது திருமழிசைக்கு மற்றொரு பெயர். மகிமைகள் அனைத்தின் ஸாரமான க்ஷேத்திரமாம். படைப்புக்கு அதிபதியான பிரம்மாவே ஓர் 'எக்ஸ்பெரிமெண்ட்' செய்து இதை நிரூபித்துக் காட்டியிருக்கிறார். அத்ரி, பிருகு, விசிஷ்டர், பார்கவர் முதலான பிரம்மரிஷிகள் பிரம்மாவுடைய சத்யலோகத்துக்குப் போய், தாங்கள் தவம் செய்ய ஏற்ற இடம் எது என்று கேட்டிருக்கிறார்கள். பிரம்மாவும் தேவ, சிற்பியை அழைத்து ஒரு தராசுத் தட்டில் பூவுலகு முழுவதையும் வைத்து, மற்றொன்றில் அதன் ஒரு துளியே துளிப் பகுதியான திருமழிசையை வைத்து எடைபோட்டுக் காட்டச் சொல்லியிருக்கிறார். பூமி தோற்றுப்போக, திருமழிசை தட்டு தாழ்ந்து நின்று ஜெயித்திருக்கிறது. துளஸிகூட கிருஷ்ணரின் எடையைச் சமன் செய்துவிட்டது. ஆனால் அந்த கிருஷ்ணன் உறையும் திருமழிசைக்கு எதைக் கொண்டும் ஈடே செய்ய முடியவில்லை!

அதனால்தான் அத்ரியும் பிருகுவும் இன்றைக்கும் திருமழிசை என்னும் மஹீஸார க்ஷேத்திரத்தின் ஜகந்நாத பெருமாள் சன்னிதியில் தவம் இயற்றிக் கொண்டிருக்கிறார்கள்.

இந்த மாமுனிவர்களைக் காட்டிலும் அதிர்ஷ்டசாலிகள் நாம்தான் என்று தோன்றுகிறது அந்த ஜகந்நாத பெருமாள் சன்னிதியில் நிற்கும்போது! பெருமாள் திருவடியில் அமர்ந்து, முனிவர்கள் இன்னமும் கண்களை இறுக்க மூடி மோனத்தில் இருக்க, நாமோ ருக்மிணி சத்யபாமா சமேதனாக, அமர்ந்த கோலத்தில் காட்சிதரும் அவனைக் கண்கள் குளிர குளிரக் காண்கிறோம்.

மூன்று ஜகந்நாதர்களுள் இவர் மத்திய ஜகந்நாதர். பூரியில் இருப்பவரும் திருபுல்லாணியில் இருப்பவரும் முறையே வட, தென் ஜகந்நாதர்கள். சென்னை - பெங்களூர் சாலையில் பூந்தமல்லியை அடுத்து, திருப்பதிக்குச் செல்ல கிளைத்துப் பிரியும் பாதையில் போனால், சில நிமிடங்களில் இடப் புறத்தில் திருமழிசை கிராமமும் கோயிலும் தென்படும். மாநகரப் (சென்னை) பேருந்துகள் இவ்வூருக்குச் செல்கின்றன.

'கிளிகொஞ்சுகிறது' என்று இந்தக் கோயிலை வர்ணிப்பது பொருத்தத்திலும் பொருத்தமாக இருக்கும். கம்பீரமான உயரத்தில் தேர்முட்டு, தகதகக்கும் திருக்குளம், பளிச்சென்று கண்ணாம்பும் காவியுமடித்த மதில்கள், அழகான, கிழக்கு பார்த்த ஐந்து நிலை கோபுரம்... அதிலே சடசடவென்று பறந்து வந்தமர்ந்து கொஞ்சிக் கொஞ்சி அழைக்கும் கிளிகள்! அண்ணாந்து அவற்றைப் பார்த்தால் வண்ண, வண்ணக் கோபுர பொம்மைகளுக்கிடையே, நீல வானத்துடன் போட்டி போடும் பகமை நிறத்தில் சடசடவென்று சிறகடிக்கின்றன; பச்சை மாமலைபோல் மேனி படைத்த அந்தப் பெருமானையே ஞாபகப்படுத்துகின்றன.

ஜகந்நாதரின் முன் அதே கிளி கொஞ்சும் அழகுடன் நிற்கும் உத்ஸவ விக்ரஹங்கள். உத்ஸவ தாயார்களின் நெற்றியிலும் பச்சை மரகத் திலகங்கள் ஒளி வீசுகின்றன. ஆண்டாள் நாச்சியார் அலாதியான அழகு ததும்ப நிற்கிறாள்.

# புகுந்து நம்முள் மேவினார்!

இந்த ஜகந்நாத பெருமான் இங்கே பிரதமர் என்றால், திருமழிசையாழ்வார்தான் ஜனாதிபதி! இரண்டாம் பிராகார மண்டபத்தில் நுழைந்ததுமே, தெற்கு நோக்கி அமர்ந்திருக்கும் அவர்தான் நம் கண்ணில் படுவார். 'புரோடோகால்' பிரகாரம் அவரை முதலில் சேவித்துவிட்டு மூலவரிடம் போக வேண்டும் என்று நம்மை வழிநடத்தி அழைத்துச் சென்றார் அர்ச்சகர் அனந்தன்.

இந்த ஆழ்வார் இவ்வூரில் சதைப் பிண்டமாகக் கிடந்திருக்கிறார். இப்பகுதியில் கூடை முடையும் கூட்டத்தினரால் கண்டெடுக்கப்பட்டு, ஜகந்நாத பெருமான் அருளால் உருவமும் புலமையும் பெற்று, தயாளன் - பங்கயச் செல்வி என்னும் வேளாளத் தம்பதியின் மகனாக வளர்ந்திருக்கிறார். ஜகந்நாத பெருமாள் பேரில் ஆழ்ந்த பக்திகொண்டு தவம் செய்யப்போக, ஞானக் கண்ணாக இவருக்குக் கால் கட்டை



* திருமங்கை வல்லித் தாயார்



★ தூய்மையான பராமரிப்பு...

**எல்லாக் கோயில்களிலும் கோஷ்ட தேவதை பிரபலமாகி வருவதைப் போல் இங்கும் ஒரு வைஷ்ணவி மக்களை ஆகர்ஷித்து வருகிறாள்.**

விரலிலே மூன்றாவது கண் தோன்றியிருக்கிறது. பக்திஸாரர் என்றும் ஓர் அழகான பெயர் இவருக்கு. அமர்ந்த நிலையில் உள்ள இவருக்குப் பின்னால் பாதுகாவலாக நிற்கிறது சுதர்ஷன சக்கரம்.

திருமழிசைப்பிரான் வைணவ ஆழ்வாராக நிலைபெறும் முன் பல்வேறு மதங்களில் ஈடுபாடு கொண்டார் என்கிறார்கள். சிவவாக்கியர் என்ற பெயருடன் சைவ சமயத்தவராக விளங்கி பாடல்கள் இயற்றியிருக்கிறார். இவை சிவவாக்கியர் திருவாயிரம் என்று அழைக்கப்படுகின்றன.

திருமழிசை ஓர் உயரிய சைவ ஸ்தலமும்கூட. குளிர்ந்தநாயகி என்கிற, செவிக்கும் மனத்துக்குமிதமான பெயர் கொண்ட அம்பாளுடன் ஒத்தாண்டீசுவரர் இவ்வூரில் குடிகொண்டிருக்கிறார்.

அவரை இன்னொரு சமயம் பார்ப்போம். இப்போது ஜகந்நாதர் ஆலயத்தை வலம் வருவோம்.

முதல் பிராகாரத்தில் தாயாருக்குத் தனி சன்னிதி இருக்கிறது. திருமங்கை வல்லித்தாயார் என்று பெயர் அவளுக்கு. அழகான ஹாரங்களும் சிந்தூரத் திலகமும் அவள் சௌந்தர்யத்தினால் மேலும் பொலிவாகத் தெரிகின்றன. பெருமாளிடம் என்ன வேண்டிக் கொண்டாலும் அவன் இதயத்தில் வாஸம் செய்கிற இந்தத் தாயாரைத்தான் முதலில் தொட்டசைக்கிறது. வரப்பிரசாதங்களை வாரி வழங்கிப் புகழ் பெற்றுவிட்டாள். "ஐச்வர்யமா, கொடுத்தேன்! குழந்தைப் பேறா, தந்தேன்!" என்று கொடுத்துச் சிவந்த கரத்தினளாகப் பெயர் பெற்றுவிட்டாள்.

அர்ச்சகர் அனந்தன் ஆராதனை செய்கிற அழகில், அவர் தருகிற மஞ்சள் காப்பும், குங்குமப் பிரசாதமுமே நமக்கு வரம் கிடைத்த சந்தோஷத்தை அளிக்கின்றன.

பிராகாரத்தில், மணவாள மாமுனிகள், அழகிய சிங்கர், லக்ஷ்மி நரசிம்ஹர் என்று வைணவ சம்பிரதாயப்படி அர்ச்சா மூர்த்திகளும் ஆசார்ய மூர்த்திகளும் உண்டு.

சிற்பங்களும் தூண்களும் கோயில் அமைப்பும், சோழர் காலம் (பதினொராம்

நூற்றாண்டு) பல்லவர் காலம் என தமிழக வரலாற்றுடன் இக் கோயில் கலந்திருப்பதை உணர்த்துகின்றன. இங்கு கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டுகளும் அதற்கு 'ஆமாம்' போடுகின்றன.

இப்போது எல்லாக் கோயில்களிலுமே ஒரு கோஷ்ட தேவதை - அதாவது திருச்சுற்றில் காணப்படும் தெய்வ உருவம் - பிரபலமாகி வருவதைப் போல் இங்கும் ஒரு வைஷ்ணவி மக்களை ஏகமாக ஆகர்ஷித்து வருகிறாள். ஆழ்வார் சன்னிதி திருச்சுற்று தேவியான இவளுக்கு, செவ்வாய் வெள்ளி ராகுகாலங்களில் விசேஷ திருமஞ்சனம் செய்வித்து பிரார்த்தனைகள் செய்தால், குறைகள் தீரும். விஷ்ணு துர்கையாக கைகளில் சங்கு - சக்கரம் ஏந்தி நிற்பவள், திருமணத் தடைகளை நீக்கி இல்லறத்தில் ஏற்றம் தருகிறாள்.

திருமழிசையாழ்வார் நிகழ்த்திய அற்புதங்களைப் பற்றி நிறைய கதைகள் இருக்கின்றன. ஆனால், அவை அனைத்திலும் மேலான அற்புதம் அவருடைய பாசுரங்கள் (நான்முகன் திருவந்தாதி; திருச்சந்த விருத்தம்) - எளிய தண் தமிழில் கண்ணனின் பெருமையைப் பொட்டலம் கட்டிவிடுகின்றன - இந்தப் பாசுரங்கள். ஜகந்நாத பெருமாள் திருச்சுற்றை ஒரு முறை வலம் வருவதற்குள் ஒரு பாசுரத்தை மனப்பாடம் செய்துவிடலாம்; அவ்வளவு எளிமை :

அத்தனாகி அன்னையாகி ஆளும்
எம்பிரானுமாய்
ஒத்தொவ்வாத பல்பிறப்பொழித்து
நம்மை ஆட்கொள்வான்
முத்தனார் முகுந்தனார் புகுந்து
நம்முள் மேவினார்
எத்தினால் இடர்க்கடல் கிடத்தி ஏழை
நெஞ்சமே

நம்மை ஆட்கொண்டு, வண்டுபோல் குடைந்து, நமக்குள்ளேயே புகுந்து குடியேறிவிட்டானாம் திருமால். 'அதன் பிறகுமா துயரப்படுகிறாய் ஏழை நெஞ்சமே!' என்று கருணையோடு நமக்கு நெஞ்சுரம் கூட்டுகிறார் திருமழிசையாழ்வார். ஆயிரம் சுயமுன்னேற்ற நூல்களின் ஸாரமான வாமனாவதாரம் மாதிரி இல்லை இப்பாசுரம்!

**தொடர்புக்கு : அர்ச்சகர் அனந்தன்: 9840723124**

படங்கள் : **ஸ்ரீஹரி**
சித்திரங்கள் : **வேதா**

**விஷ்ணு துர்கையாக கைகளில் சங்கு-சக்கரம் ஏந்தி நிற்பவள், திருமணத் தடைகளை நீக்கி இல்லறத்தில் ஏற்றம் தருகிறாள்.**



• திருக்குளம்



• சரியான கணக்கு

# எம்.ஜி.ஆர்.

தராசு



• இணைந்த வெற்றி!

● ஏ.கவிதா, சென்னை - 76

**? பஸ், ரயில் விபத்துகள் அடிக்கடி நடக்கும். விமான விபத்துகள் எப்போதாவது நடக்கும். இப்போது கப்பல் விபத்து கூட நடக்க ஆரம்பித்துள்ளதே?**

! "நாங்கள் தங்கியிருந்த ஓட்டலில் இரவு முழுதும் ஒரே சத்தம். அதனால் விதிமுறைப்படி எனக்குக் கிடைக்க வேண்டிய எட்டு மணி நேரத் தூக்கமும் கூடுதலான நான்கு மணி நேர ஓய்வும் கிடைக்கவில்லை. எனவே நான் விமானத்தைச் செலுத்த மாட்டேன். அது பயணிகளை ஆபத்துக்கு உள்ளாக்கும்" என்று சொன்ன பிரிட்டிஷ் ஏர்வேஸ் பைலட் பாராட்டுக்குரியவர். எல்லோருமே இப்படிப் பொறுப்புணர்வுடன் நடந்துகொண்டால் லெவல் கிராஸிங் விபத்துகள் முதல் கப்பல் விபத்துகள் வரை அனைத்துமே அரிதாகிவிடும்.

● ஆர்.குமாரசுப்பிரமணியன், நாகர்கோவில் ❒

**? 'எம்.ஜி.ஆர். தி.மு.க.வுக்குத் துரோகம் செய்துவிட்டுச் சென்றவர்' என சட்டசபையில் விவாதம் நடந்தது. ஆனால், மக்கள் அவரை ஏற்றுக்கொண்டு 11 வருடங்களுக்கு முதலமைச்சராக்கினார்களே?**

! 'அவர் கணக்குக் கேட்டது துரோகமல்ல; நியாயம்' என்று பெரும்பாலான தி.மு.க. தொண்டர்களும் கருதியதால்தான்.

● பழ.நாகலட்சுமி, கிழக்குத்தாம்பரம்

**? ராகுல் காந்தி...?**

! அரசியலைப் பொருத்த அளவில் கொஞ்சம் ரா(raw) காந்தி! அதனால்தான் நேரு குடும்பத்தின் சாதனைகள் என்று சிலவற்றைப் பட்டியலிட்டுச் சமீபத்தில் சிக்கலில் மாட்டிக்கொண்டார்.

● பி.சிவா, பாளையங்கோட்டை

**? பாசனத்துக்குப் பயன்படுத்தப்படாத ஏரிகளில் கட்டடம் கட்டலாம் என்கிறாரே துரைமுருகன்?**

! ரொம்பத் தவறான கருத்து. பாசனத்துக்குப் பயன்படுத்தப்படாத ஏரிகளும் நிலத்தடி நீரை வளப்படுத்துவதால் பலன் தருகின்றன; சுற்றுச்சூழல் உஷ்ணத்தைக் குறைக்கின்றன. இவற்றைப் பாதுகாப்பது மிக அவசியம்.

● ஆர்.ராஜதுரை, சீர்காழி

**? செண்டூர் வெடி விபத்தில் பலியானோர் குடும்பங்களுக்குத் தலா ரூபாய் ஒரு லட்சம் நிவாரணம்; ஆனால் இலங்கைக் கடற்படையினரால் சுடப்பட்டு மாண்ட மீனவர்களின் குடும்பங்களுக்கு ஐந்து லட்சம் நிவாரணம்! ஏன் இந்தப் பாரபட்சம்?**

! முதலாவது தனியார் நிறுவனத்தின் அஜாக்கிரதையினால் விளைந்தது; அரசுக்குப் பகுதியளவு பொறுப்பு. இரண்

# செய்தது துரோகமா?

டாவது அரசின் கையாலாகாத்தனத்தால் விளைந்தது; அரசுக்கு முழுப் பொறுப்பு. எனவே, இரண்டாவதுக்கு கூடுதல் நஷ்டஈடு தரும் தார்மிகப் பொறுப்பு அரசுக்கு.



• 'கொடூரக் கட்டு!'

● **மு.மதிவாணன், ஆரூர்**

***? "ஜல்லிக்கட்டில் வீரத்தைத் தடுக்க மாட்டோம்'' என்ற கலைஞரின் அறிவிப்பைப் பற்றி...?***

! வீரத்தைக் காட்டிலும் விலங்குக்கு இழைக்கப்படும் கொடுமையே இவ்விளையாட்டில் அதிகம்; அபாயமும் அதிகம். மனிதப் பண்பு உயர உயர, வீரம் என்பதற்கான அடையாளம் மாறும். இன்று அஹிம்சை, கருணை, சக ஜீவராசிகளை நேசித்தல் – இவையே வீரம்.

• இளங்கன்று...



● **எஸ்.முரளி, குறிஞ்சிப்பாடி**

***? உலக வங்கியின் தலைவர் வுல்ஃபோவிட்ச் தமது காதலிக்கு 31 ஆயிரம் பவுண்டுகளுக்கு மேல் சம்பளத்தை உயர்த்தினாராமே?***

! கண்டுபிடிக்கப்பட்ட பிறகு தப்பு செய்ததை ஒப்புக்கொள்கிற கண்ணியமாவது அவருக்கு இருந்துச்சு! நம்ம நாட்டுப் புண்ணியவான்களும் புண்ணியவதிகளும் கடைசி வரை வாதாடியும், வாய்தா வாங்கியுமே காலத்தைத் தள்ளிடுவாங்க!

## நீங்கள் கேட்டவை

● **எம்.பாஸ்கர், திண்டுக்கல்**

***? ''கடலோரக் காவல்படைக்குப் பத்து லட்ச ரூபாய் லஞ்சம் கொடுத்து இந்தியாவுக்குள் ஊடுருவினோம்'' என்று, பிடிபட்ட பாக். பயங்கரவாதிகள் கூறுவது எதைக் காட்டுகிறது?***

! இது உண்மையானால், பாதுகாப்புக்கென்று பட்ஜெட்டில் அரசு ஒதுக்கும் கோடானு கோடிகள் எவ்வளவு வீண் என்பதைக் காட்டுகிறது. அமைதிக்குப் பாடுபடுவதே மேல் என்று உணர்த்துகிறது. ஆனால், பொய் பேசுவதும் பயங்கரவாதத்தின் ஓர் அம்சமாக இருப்பதை நாம்



• வறண்ட கருத்து!



• தடுமாற்றத்திலும் துணிவு!

மறக்கக் கூடாது.

● இரா.புவனேஸ்வரி, சென்னை - 68

**? விபசாரத்தைப் பொழுதுபோக்குத் தொழிலாக அறிவிக்க, கோரிக்கை வைக்கப் பட்டுள்ளதே?**

! இப்படி ஒரு கௌரவத் திரை போட்டு அங்கீகாரம் தேடுபவர்கள், பாலியல் தொழிலால் பரவும் எய்ட்ஸ் உள்ளிட்ட பல ரக நோய்களையும் பொழுதுபோக்காகக் கருதுவார்களா? கள்ளச் சாராயத்தைக் கட்டுப் படுத்த முடியாது என்று சமாதானம் கூறி, மதுக் கடைகளைத் திறப்பதைப்போல் தான் இதுவும்.

● அ.பாக்கியராஜ், ஆவரம்பட்டி ★

**? ரஜினியின் வெற்றிக்கு யார் காரணம்?**

! ரஜினியும் அவருடைய ரசிகர்களும்.

● ந.முராரி, சேலம் - 1

**? செல்ஃபோன் வைத்துக் கொள்ளாதவர்களைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?**

! எல்லோரிடமும் ஒரு செல்ஃபோன் அல்லது லேண்ட் லைன் ஃபோன் கைக்கெட்டும் அளவில் இருக்க வேண்டும். அந்த அளவுக்கு நம் நாட்டு மக்களின் வாழ்க்கைத் தரம் உயர வேண்டும் என்று பிரார்த்திப்பேன்.

□ ரூ. 100/- பரிசு பெறுபவர்:
ஆர்.குமாரசுப்பிரமணியன்,
3-B/1, கருணை இல்லம்,
அம்மன் கோயில் தெரு,
கீழராமன் புதூர், தட்டான்விளை,
நாகர்கோவில் - 629 002

★ ரூ 50 பரிசு பெறுபவர்:
அ.பாக்கியராஜ்,
95C/C4, கல்யாண சுந்தரனார்
தெரு,
ஸ்ரீராம் ஆரம்பப்பள்ளி அருகில்,
ஆவரம்பட்டி,
இராஜபாளையம் - 626 117

● உமரி.பொ. கணேசன், மும்பை

**? தமிழக காங்கிரஸ் முடங்கிக் கிடப்பதாக ஈ.வி.கே.எஸ்.இளங்கோவன் சொல்கிறாரே?**

! சே! சே! நாளொரு கோஷ்டிப் பூசலில் ஆக்டிவ்வா இருக்கே! சமீபத்தில் கூட அம்பேத்கர் பிறந்தநாளை எந்த கோஷ்டி கொண்டாடணும்னு அடிச்சுக் கிட்டாங்களே!

● என்.சண்முகம், திருவண்ணாமலை

**? தமிழகத்தைச் சேர்ந்த வேளாண் விஞ்ஞானி எம்.எஸ்.சுவாமிநாதன், மத்திய மேல்சபை எம்.பி.யாக நியமிக்கப் பட்டிருப்பது நமக்குப் பெருமை தானே?**

! எம்.பி.யாக நியமிக்கப்பட்டது ரொம்ப மகிழ்ச்சிதான். ஆனால் அவர் பேச அனுமதிக்கப்படணும்; போதிய நேரம் அவருக்குத் தரப்படணும்; அவர் பேச்சைக் கேட்க அமைச்சர்கள் அவையிலே இருக்கணும்; கேட்டு அவர் சொற்படி நடக்கணும்... இதெல்லாம் நடந்தா பெருமைப்படலாமுங்க. அவரை ஓரங்கட்டுறதுக்காகத்தான் எம்.பி. பதவியோன்னு சந்தேகம் ஏற்படுதுங்க! ●

**வாசக தராசுகளே, வாக்களியுங்கள்!**

மிகச் சிறந்த பதில் எது? இவ்வாரத்துக்கான தேர்வை அஞ்சல் அட்டையில் எழுதி, கல்கி அலுவலகத்துக்கு 04.05.2007க்கு முன்னதாக அனுப்புங்கள். முகவரிப் பகுதியில் 'வாசக தராசு 29.04.2007' என்று குறிப்பிட வேண்டும். அதிக வாக்குகள் பெறும் கேள்வியைத் தேர்வு செய்பவர்களுள் ஒருவருக்குக் குலுக்கலில் ரூ 100/- பரிசு!



# அன்பிற்கினியவன்

அன்றும் அந்த ஜெராக்ஸ் கடைக்கு வனிதா சென்றபோது...

சுகுமார்தான் இருந்தான்.

'வாங்க' என்று வரவேற்றான். "இந்தத் தடவை எங்கே விண்ணப் பிக்கப் போறீங்க?"

புன்னகைத்தாள். "ரயில்வே துறைக்கு!"

"எத்தனை காப்பி?"

"ஒவ்வொண்ணுலேயும் ரெண்டு!"

இந்த ஒரு வருடத்தில் இவள் வருவது ஐந்தாவது தடவை.

இதற்கு முன்பு இரண்டு தடவை அவள் இங்கு வந்தபோது, வேறு யாரோ ஓர் உம்மணாமூஞ்சி இருந்தார். எந்திரத் தனமாக நகல் எடுத்துக் கொடுத்துவிட்டு, அதற்கான காசு வாங்கிக் கொண்டதோடு சரி.

"இந்தத் தடவையாவது உங்களுக்கு வேலை கெடைக்கட்டும்" என்றவாறே அசல் சான்றிதழ்களையும் நகல்களையும் தந்தான்.

நான்கு மாதங்கள் கழித்து...

ஜெராக்ஸ் கடைக்கு வனிதா சென்ற போது...

"இத்தனை நாளா நீங்க வராம இருந்த தால ரயில்வே வேலை கெடைச்சிருக் கும்னு நெனைச்சுக்கிட்டிருந்தேன்..." என்றான் சுகுமார்.

"ப்ச்...." உதட்டைப் பிதுக்கினாள். "வழக்கம்போல் தோல்விதான்... இந்தத் தடவை நெடுஞ்சாலைத் துறைக்கு விண் ணப்பிக்கலாம்னு..."

நகல்களை வாங்கிச் சென் றாள்.

சில தினங்கள் கழித்து...

வனிதாவிடம் போனில் பேசினான் சுகுமார். உடனே ஜெராக்ஸ் கடைக்கு வந்து தன்னைப் பார்க்கும்படி. ஒன்றும் புரியாமலே புறப்பட்டு விட்டாள்.

வந்தவளிடம் சொன்னான் சுகுமார். "அடிக்கடி நகல் எடுத்ததால ஒங்க ஃபோன் நம்பர் எனக்குத் தெரியும். நாளை யிலேர்ந்து இங்கே என் வேலை காலியா குது. உங்களுக்கு விருப்பம்னா, நீங்க இங்க சேந்துக்கலாம். சம்பளம் ரெண்டாயிரம் ரூபா. உள்ளூராவும் ஆச்சு. நல்ல வேலை கெடைக்கிறவரைக்கும் நீங்க இங்கே வேலையிலே இருக்கலாமே? ஓனர்கிட்ட நான் சொன்னா கேட்பார்."

வனிதா முகம் மலர்ந்தாள். "சேந்துக் கிறேன். நீங்க?"

"நானும் ஒரு க்ராஜுவேட்தான். நல்ல வேலைக்காக விண்ணப்பிச்சிருந்தேன். இப்ப கெடைச்சிருச்சு. அதனாலதான் இந்த வேலையை உங்களுக்குத் தர ஏற் பாடு செஞ்சேன்."

# வேலை கிடைச்சிடுச்சு!



# அஞ்சலி

**கர்நாடக இசை உலகம் நான்கு ஜாம்பவான்களை இழந்த துயரத்தில் இருக்கிறது...**

### சுப்புடு

தில்லியில் 1962ல் எனக்கு முதல் முதலாக அறிமுகமானார் சுப்புடு. பூர்ணம், பஞ்சாபகேசன், நான் எல்லோரும் ரேடியோவில் செய்தி வாசிப்போம். ஏழரை மணிக்கு மேல் எங்களுடன் அரட்டை அடிக்க, ஆறு மணிக்கே ஆஜராகிவிடுவார் சுப்புடு!

நாமசங்கீர்த்தனம் என்றால் உயிர் அவருக்கு. முத்தையா பாகவதருக்கே அந்தக் காலத்தில் ஆர்மோனியம் வாசித்திருக்கிறார்.

எனக்கு நிறைய கச்சேரிகளுக்கு வாசித்திருக்கிறார். நகைச்சுவை அவர் உடன்பிறப்பு. ஒரு கச்சேரி முடிந்ததும், ஒரு ரசிகர் அவருக்கு 'பொக்கே' கொடுத்தார். 'இதுதான் என் வாயிலயே இருக்கே!" என்றார், அதை வாங்கிக் கொண்டு.

ஒரு நாட்டிய நிகழ்ச்சியில் 'ப்ரோவ பாரமா' என்ற வரிக்கு ஆடும்போது, தலையில் ஏதோ பாரத்தைத் தூக்கிக் கொண்டிருப்பதுபோல் நடனமணி அபிநயம் செய்தார். 'இவ என்ன நாட்டியக்காரியா இல்லே போர்ட்டரா?' என்று பளிச்சென்று கேட்டுவிட்டார். அதுதான் சுப்புடு!

லலிதா சஹஸ்ரநாமம் முழுதும் அர்த்தத்துடன் சொல்லுவார். அசாதாரண மனிதர். ஆகாரத்தில் வெகு சிட்டையாக இருப்பார். நிகழ்ச்சிகளின்போது குறிப்பு எடுத்துக்கொள்ளும் வழக்கமே அவரிடம் கிடையாது.

தமிழில் எப்படி சுவாரஸ்யமாக விமர்சனம் எழுதினாரோ, அதேபோல் 'ஸ்டேட்ஸ்மென்' நாளிதழில் ஆங்கிலத்தில் எழுதினார். அவர் பேனாவில்தான் கூர்மை இருந்ததே தவிர, யாரையும் புண்படும்படி பேச மாட்டார்.

**- அமெரிக்காவிலிருந்து ஹெச்.ராமகிருஷ்ணன்**

• சுப்புடு



### டி.முக்தா

பிருந்தா முக்தா சகோதரிகளுள் இளையவர் டி.முக்தா. வீணை தனம்மாள் பாணி சங்கீதத்தின் முக்கிய பிரதிநிதி. அவர் மறைவினால் ஓர் அரிய பாரம்பரிய வரிசையில் இட்டு நிரப்ப முடியாத வெற்றிடம்...

எப்போது போனாலும் சந்தோஷமாக, வாய் நிறையப் புன்னகையுடன் வரவேற்பார் முக்தாம்மா. அவரிடம் பாடம் கேட்பது என்றால், வழக்கமாக ஒரு குருவிடம் கற்றுக்கொள்வது போல் இருக்காது. கொஞ்சம் பாடத் தெரிந்த பின்தான் அவரிடம் போய்க் கற்க முடியும். ஆனால் சிநேக பாவத்துடன், ஆசை ஆசையாகச் சொல்லிக் கொடுப்பார். எத்தனை தடவை 'ரிபீட்' பண்ண வேண்டி வந்தாலும் கோபித்துக் கொள்ளவே மாட்டார். 'ரிக்கார்ட் பண்ணி எடுத்துக் கொள்' என்பார்.

சாதாரணமாக, முக்தாம்மா யார் வீட்டுக்கும் போக மாட்டார். டி.விசுவநாதன் (விசுவா) அமெரிக்காவிலிருந்து கடைசி தடவையாக வந்திருந்தபோது, அக்காவையும்

அழைத்துக்கொண்டு எங்கள் வீட்டுக்கு வந்திருந்தார். சுப்பராம தீட்சிதரின் 'சங்கராசார்யம்' கீர்த்தனையை இருவரும் சேர்ந்து பாடினார்கள். அற்புதமான அனுபவம் அது! பிறகு நாங்கள் எல்லோரும் சேர்ந்து அந்தக் கீர்த்தனையைப் பாடினோம். எப்பேர்ப்பட்ட பாக்கியம் அது என்று இப்போதும் நினைத்துக்கொண்டு ஆனந்தப் படுவேன்.

படுக்கையாகப் படுத்த பிறகும்கூட, யார் வந்தார்கள் யார் போனார்கள் என்று தெரியாவிட்டாலும், பாட்டில் எதுவும் அவருக்கு மறக்கவே இல்லை. ஒரு சங்கதி கூட விட மாட்டார். அப்படியே படுத்த படியே பாடிவிடுவார். அப்படி ஒரு ஞாபக சக்தி!

- அண்மையில் காலமான
டி.முக்தா பற்றி கர்நாடக இசைக்
கலைஞர் ரமா ரவி



• ஆர். யக்ஞராமன்

## திருவெண்காடு ஜெயராமன்

அடையாறு கான்சர் இன்ஸ்டிட்யூட்டில் அவரைப் பார்த்துப் பேசிக் கொண்டிருந்தோம். பழைய சம்பவங்கள் சிலவற்றை நினைத்துப் பார்த்து, சிரிக்கச் சிரிக்கப் பேசிக் கொண்டிருந்தார். 'இரண்டே வாரத்தில் வீடு திரும்பி விடுவேன்!' என்று சொன்னார்.

ஆனால் வீடு திரும்பியவருக்கு நினைவு திரும்பவில்லை. கோமா நிலையிலேயே இருந்தார். அவரைப் பார்க்கப் போனபோது மீனாட்சியம்மன் பேரில் நிறைய விருத்தங்கள் பாடினோம். அவருக்கு ரொம்பவும் பிடிக்கும் கமலாம்பா நவாவர்ணம் (ஸஹானா) பாடினோம். 'மீனாட்சி மேமுதம்' பாடிக்கொண்டிருந்தபோது அவருடைய உயிர் பிரிந்தது. முத்துஸ்வாமி தீக்ஷிதர் நற்கதி அடையும் முன் தமது சீடர்களை இக் கீர்த்தனையைத்தான் பாடச் சொல்லிக் கேட்டார் என்று நினைக்கிறபோது, திருவெண்காடு ஜெயராமனும் அதே மாதிரி நற்கதி எய்தியிருப்பார் என்றே நம்புகிறேன்.

என் மாமாவும், குருவுமான மதுரை மணி அவர்களிடம் இசை பயின்றவர். அவர் மீது அளவற்ற பக்தி கொண்டவர் திருவெண்காடு ஜெயராமன். மதுரை மணி பாணியை பக்தியோடு காத்தார். குரல் வளத்தை மட்டுமே நம்பிக் கொண்டிராமல், தமது வித்வத்தினாலும் கட்டுப்பாடுகளை மீறாத சங்கீத பாணியினாலும் ரசிகர்



• டி.முக்தா

**படுக்கையாகப் படுத்த பிறகும்கூட, யார் வந்தார்கள், யார் போனார்கள் என்று தெரியாவிட்டாலும் பாட்டில் எதுவும் அவருக்கு மறக்கவே இல்லை!**

களைக் கவர்ந்தார்.

நமது சங்கீதம் உணர்த்தும் ஆழ்ந்த வேதாந்தப் பொருளை ஏற்று, கடைப்பிடித்து வாழ்ந்தார். திருவையாறு தியாகராஜ ஆராதனையின்போது கர்த்தாவாக விளங்கி பல ஆண்டுகள் கைங்கர்யம் செய்திருக்கிறார். இளைஞர்களுடைய கச்சேரிகளுக்குப் போய் உட்கார்ந்து ரசித்து, மனம் விட்டுப் பாராட்டுவார். ஆர்ப்பாட்டமில்லாத சங்கீதம்; ஆடம்பரமில்லாத வாழ்க்கை, நோய் கடுமையாக இருந்த போதும் அச்சமோ சஞ்சலமோ இல்லாத இறுதிக்காலம்... வேறு என்ன வேண்டும் ஒரு மனிதருக்கு!

- இசைக் கலைஞர்
டி.வி. சங்கரநாராயணன்



• கிருஷ்ணகான சபாவில் செம்மங்குடிக்குப் பக்கவாத்தியமாக இளைஞன் கிருஷ்ணன்

## ஆர். யக்ஞராமன்

கடினமான நாயகி ராகத்தைப் பிரமாதமாக ஆலாபனை செய்து, 'ரங்கநாயகம்' கீர்த்தனையைப் பாடிக் கொண்டிருந்தார் அந்த இளைஞர். கிருஷ்ணகான சபாவில் அந்தப் புதுமுகப் பாடகருக்குப் பக்க வாத்தியமாக சீனியர்கள்: லால்குடி ஜெயராமன்; உமையாள்புரம் சிவராமன்! அன்றைய புதுமுக இளைஞர்தான் இன்று பிரபலமாக விளங்கும் டி.என்.சேஷகோபாலன்.

தகுதியும் ஆற்றலும் படைத்த இளம் கலைஞர்களுக்கு மூத்த பக்கவாத்திய கலைஞர்களை வாசிக்கச் செய்து ரசிகர்களிடையே ஆர்வத்தைத் தூண்டும் ஒரு யுக்தியை யக்ஞராமன் அடிக்கடி கையாண்டார். சிறுவனாக இருந்த லால்குடி ஜி.கே.ஆர்.கிருஷ்ணன் செம்மங்குடிக்கு வயலின் வாசித்து, அவரிடம் பாராட்டும், இசை உலகில் தனி இடமும் பெற்றது யக்ஞராமனின் முனைப்பினால்தான்!

• திருவெண்காடு ஜெயராமன்



எடுத்த காரியத்தை முடித்து வைப்பதில் கிருஷ்ணகான சபா செயலர் யக்ஞராமன் கெட்டிக்காரர். சபாவுக்கான நிலத்தை வாங்கி, அதில் தாம் விருப்பப்பட்டபடியே அழகான அரங்கத்தை நிறுவி வெற்றி கண்டார். கிருஷ்ணகான சபா இருக்கும் க்ரிஃபித் சாலைக்கு, சபாவை நிறுவிய இசைக்கலைஞர் மகாராஜபுரம் சந்தானத்தின் பெயரைச் சூட்ட வைத்தார்.

எல்லா சபாக்களும் மார்கழி இசை விழாவையொட்டி இசை ஆராய்ச்சி அரங்குகளை நடத்த, கிருஷ்ணகான சபாவில் நாட்டிய கருத்தரங்கும் பின்னர் நாம ஸங்கீர்த்தனமும் நடக்க ஏற்பாடு செய்தார். பிரவசனங்கள், உபன்யாஸங்களும் குறைவின்றி ஏற்பாடு செய்தார்.

உடல் நலமின்றி மருத்துவமனையில் இருந்த கடைசி நாட்களைத் தவிர, அவர் சபாவுக்கு வராத நாட்களே அனேகமாக இல்லை என்று சொல்லலாம். அவருடைய முதல் குடும்பம் கிருஷ்ணகான சபாதான்.

தொகுப்பு : **சாருகேசி**

**'மீனாட்சி மேமுதம்' பாடிக்கொண்டிருந்த போது அவருடைய உயிர் பிரிந்தது!**



# மன்னரின் உறுதிமொழி!





"புலவர் பாடி முடித்ததும் அரசர் ஏன் முகம் வெளிறிப் போய்க் கிடக்கிறார்?"

"புலவர் மகாராஜா சுயம்வரத்துக்குப் போன கதையைப் பாடினாராம்."

- ஜெயந்தி சிவகுமார்

"மன்னர் போரில் புறமுதுகு காட்டுவதில்லைன்னு உறுதிமொழி எடுத்துட்டார்."

"அப்படியா...?"

"ஆமாம், நேரடியாக சரண்டர்தானாம்!"

- கே.சித்ரா

"மன்னர் அவைக்களப் புலவரைச் சிறையில் அடைத்து விட்டாரே..."

"அவர் மகாராஜாவுக்குப் பதிலாக மெகா ராஜான்னு பாடினாராம்."

- இரா.கணேசன்

அன்பு வாசகர்களே!

அமரர் கல்கி அவர்களால் தோற்றுவிக்கப்பட்டு இன்றும் உங்கள் கரங்களில் தவழ்ந்து கொண்டிருக்கும் **கல்கி வார இதழின்** எக்கால நோக்கமும் தேச நலன்தான்.

நடுநிலையான தலையங்கம், அரசியல் / சமூக அக்கறையுடன் கூடிய கவர் ஸ்டோரி, உயர்நோக்கு கொண்ட சிறுகதைகள், குடும்பத்துடன் ஜாலியாக அமர்ந்து படிக்கக்கூடிய சினிமா... என்று பல்சுவை செய்திகளுடன் கல்கி வலம் வருகிறது.

கல்கி நிறுவனத்திலிருந்து மதிப்புமிக்க வாசகர்களாகிய உங்களைச் சந்திக்க உங்கள் ஊருக்கே வருகிறது கல்கி ஆசிரியர் குழு. இந்தச் சந்திப்பில் நீங்கள் உங்கள் குடும்பத்தோடு அவசியம் கலந்துகொண்டு, 'கல்கி' வார இதழைப் பற்றிய உங்களுடைய மேலான யோசனைகளையும் கருத்துகளையும் பரிமாறி, ஆக்கபூர்வமான யோசனைகளின் மூலம் கல்கி இதழை மேலும் மிளிரச் செய்ய உதவ வேண்டுகிறோம்.

இதயத்தை இதமாக்கும் 'கலகல' நிகழ்ச்சிகளும், இன்ப அதிர்ச்சியூட்டும் பரிசுப் போட்டிகளும் உண்டு. உங்கள் ஊருக்கு நாங்கள் வரும் தேதியை இன்றே உங்கள் நாட்குறிப்பில் குறித்து வைத்துக் கொள்ளுங்களேன்!

- ஆசிரியர் குழு

# உங்கள் ஊரில் கல்கி



## கோவை

இடம் : அண்ணாமலை ஹோட்டல்,
ரயில்வே ஜங்ஷன் ரோடு,
சாந்தி தியேட்டர் அருகில்,
தேதி : 28.4.2007
நேரம் : மாலை 4.30 மணி

விரைவில் மற்ற ஊர்களிலும்...

## ஈரோடு

இடம் : ஸ்ரீமாளி ரெஸிடென்ஸி Brough ரோடு,
தொலைபேசி பவன் அருகில்
தேதி : 29.4.2007
நேரம் : மாலை 4.30 மணி

29.4.2007 இணைப்பு




# கல்கி

குடும்பத்துடன் படிக்க...



தண்ணீர் முதல்
எண்ணெய் வரை



திணைமாவு டு
திகட்டாத தேன்



உச்சந்தலை முதல்
உள்ளங்கால் வரை

எல்லாம் உங்கள்
பார்வைக்கு!



# சக்ஸஸ் ஸ்டோரி

'டீம்' நிறுவனத்தின் வெற்றிக்கும் அதன் புதுவித அடையாளங்களுக்கும் நிறுவனர் டாக்டர் கிருஷ்ணமூர்த்தி ராவ் எடுத்துக்கொண்ட முயற்சியும் ஒருமித்த சிந்தனையும் பல தடைகளைத் தாண்டி வெற்றிக்குப் பாதை வகுத்து, வேக நடைப்போட வைத்தது.

சுமார் 39 வருடங்களுக்கு முன் 07.07.1967 தொடங்கப்பட்டபோது இந்த நிறுவனத்தின் பெயர் **'கெம்ஃபாப்'**. அது 'லைசன்ஸ் ராஜ்' என்று அழைக்கப்பட்ட காலம். தொழில் துவங்குவது எளிதான விஷயமல்ல.

## டைட்டானியம்

டைட்டானியப் பயன்பாடு என்ற கோணத்தில் செயல்பட்ட முதல் தனியார் நிறுவனம் கெம்ஃபாப் தான். டைட்டானியம் குறித்து நிறைய ஆராய்ச்சிகள் நடைபெற ஊக்குவித்தார் இரு ராவ். பாபா அணு ஆராய்ச்சி நிலையத்துக்கும் டைட்டானியம் உலோகம் அதிகமாகத் தேவைப் பட்டதால் அவர்கள் கெம்ஃபாப் நிறுவனத்தின் ஆராய்ச்சிகளை கவனித்து குறித்துக் கொண்டனர்.

நம் நாட்டில் டைட்டானிய உலோகம் உற்பத்தி இல்லை என்பதால் அது முழுக்க இறக்குமதி செய்யப்பட்டது. எனவே அரசு துறையில் நிறைய கட்டுப்பாடுகள் நிலவின. அப்போதைய தொழில் அமைச்சர் 'டி.எ.பை.' இந்த இறக்குமதிக்கான லைசென்ஸை கெம்ஃபாபுக்கு அளித்தார்.

நாளடைவில் 'டைடானியம் எக்யூப் மெண்ட் அண்ட் ஆனோடு மானுஃபேக் சரிங் கம்பெனி' (Team) 7.7.1977 அன்று உறுவாகிச் செயல்படத்தொடங்கியது. நம் நாட்டின் பாதுகாப்புப் பிரிவுக்கும் ஏவுகணைகளுக்கும்கூட டைட்டானியம் உலோகம் தேவை என்பதும், அந்த விதத்திலும் டீம் நிறுவனம் உதவியது என்பதும் குறிப்பிடத்தக்கது.

குஜராத்தில் அப்போது கடும் தண்ணீர்ப் பஞ்சம். இதைப் போக்க முன்வந்த டாடா கெமிகல்ஸ் நிறுவனத்துக்கு இதற்காக டைடானியம் கண்டென்சர் தேவைப்பட்டது. டீமை அணுகிய அந்த நிறுவனம் குறிப்பிட்ட காலத்தைவிட முன்னதாகவே இவற்றைத் தயாரித்துக் கொடுத்தால் போனஸாக ஒரு கணிசமான தொகை தருவதாக அறிவித்தது. டீம் நிறுவனம், டாடா நிறுவனத்தின் சவாலை ஏற்று, வெற்றிப் பெற்றது.

காரைக்குடியில் உள்ள மத்திய மின் வேதியியல் ஆராய்ச்சி நிறுவனத்துடன் இணைந்து டீம் நிறுவனம் 100 சதவிகிதம் இந்தியாவிலேயே தயாரான டைடானியம் மின் கடத்திகளைத் (Titanium Metal Anodes) தயாரித்தது. அதுவரை பயன்படுத்தப்பட்டு







வந்த கிராஃபைட் மின்கடத்திகள் மெள்ள மெள்ள மறைந்தன. இதனால் மின் செலவு குறைந்தது. ஜி.டி.பிர்லா இது குறித்து 'இந்த தொழில்நுட்பம் நம் நாட்டிற்கு மிக முக்கியமானது. இது பெருமளவில் மின்சாரத்தை மிச்சம் பிடிக்கவல்லது. இதை வெற்றிகரமாக ஆக்கியே தீர வேண்டும்" என்றார்.

"புதிய தொழில்நுட்பத்தைக் கொண்டு வரவேண்டும் என்று பலரும் பேசுகிறார்கள். ஆனால் அதை உண்மையில் கொண்டு வந்தது நீங்கள்தான்" என்று கிருஷ்ண மூர்த்தி ராவை மனமாரப் பாராட்டினார் தொழிலதிபர் ஆதித்ய பிர்லா.

# டீம் என்றால் வெற்றி!


• டாக்டர் ராவ்

## மெம்பிரேன் செல்

'மெம்பிரேன் செல், தொழில்நுட்பத்தை அறிமுகப்படுத்தியது டீம் நிறுவனம். இன்று இந்தியாவில் உள்ள 70 சதவிகித காஸ்டிக் தொழிற்சாலைகளில் இந்த தொழில்நுட்பம்தான் பயன்படுத்தப்படுகிறது.

## தலைசிறந்த திட்டம்

கடல்நீரைக் குடிநீராக்கும் முயற்சியில் மெரினா கடற்கரையில் இந்தியாவில் முதன் முதலாக 70 லட்சம் ரூபாய் செலவில் கடல்நீரிலிருந்து உப்பைப் பிரித்தெடுக்கும் இயந்திரங்களை இவர்கள் அமைத்தனர். அப்போதைய பிரதமர் ராஜீவ்காந்தி 'இந்த திட்டம்தான் நாட்டின் குடிநீர்ப் பிரச்னையை தீர்க்க வல்ல தலைசிறந்த திட்டம்' என்றார். தென் இந்தியாவில் இந்த தொழில்நுட்பத்தை அறிமுகப்படுத்த அரசு தேர்ந்தெடுத்த ஒரே நிறுவனம் 'டீம்'. சுமார் நாற்பதுக்கும் மேற்பட்ட கரிப்பு நீர் சுத்திகரிப்பு நிலையங்களை இராமநாதபுரம் மற்றும் லட்சத் தீவுகளில் சிறப்பான முறையில் அமைத்து மூன்றாண்டுகளுக்கு வெற்றிகரமான 'மாதிரி திட்டமாக' இதைச் செயல்படுத்தியது டீம்.

## அழகு... ஆரோக்யம்... டீம்!

சமீபகாலமாக டீம் நிறுவனம் 'Team Eubio Care' என்ற பிரிவைத் துவக்கியுள்ளது. இந்தப் பிரிவு இயற்கையான முறையில், மூலிகைகளின் பலன்கள் முழுவதும் கிடைக்கும் வகையில் பலவித அழகுசாதன மற்றும் உடல்நலப் பொருள்களைத் தயாரித்து வருகிறது.

●











ஷாப்பிங்

தமிழன்

## PALM SUGAR




மார்க்கெட்டில் கிடைக்கும் வழக்கமான சர்க்கரை இனிப்பாக இருக்கும். மினரல் உப்புகள் இல்லாததால் குறைவான சத்து கொண்டதாக இருக்கும். குறைவான மருத்துவ குணம், பக்கவிளைவுகள் உண்டு. அதிகமாக உட்கொண்டால் இருமல், ஜல தோஷம் ஆகியவற்றை உண்டாக்கலாம்.

ஆனால் பனஞ்சர்க்கரையில் தியாமின், ரிபோஃப்ளோவின், நிகோனிடிக் அமிலம், அஸ்காரிபிக் அமிலம், புரதம் ஆகியவை உள்ளன. ஆஸ்துமா, அனிமியா, ஜலதோஷம், இருமல் ஆகியவற்றைப் பனைவெல்லமும் பனஞ்சர்க்கரையும் தீர்க்க வல்லவை.










## கைக்குத்தல் தயாரிப்புகள்

பொதுவாகவே கைக்குத்தல் அரிசியில் சத்துக்கள் அதிகம் என்பது நமக்கு தெரியும். இதே அடிப்படையில் அரிசி ரவை, பஞ்சாபி கோதுமை ரவை, ராகிப்பொடி, கோதுமை ரவை தினைப்பொடி, கேழ்வரகுப் பொடி, அரிசி மாவு, Millet Gram ஆகியவை அரைக் கிலோ பாக்கெட்டுகளில் கிடைக்கிறது.

## பொடிகள்

Fenugreek பொடி, பாகல் பொடி, கொத்தமல்லி பொடி, கருவேப்பிலைப் பொடி, ரால் பொடி, இஞ்சி தூப்ஸ் பெடயா, டெல்லி மிளகாய்ப் பொடி, மில்லட் கிராம் பொடி, மஞ்சள் பொடி, சாம்பார்ப் பொடி, ரசப்பொடி ஆகியவை 100 கிராம் பாக் கெட்டுகளில் விற்பனையாகின்றன.












## HERBAL WOUND HEALER

ஆலோ ஹெர்பல் வூண்ட் ஹீலர் புண்களை ஆற்றும் மிகச் சிறந்த நிவாரணி. அடிபட்ட வெட்டுக்காயங்கள், சூட்டுப் புண்களை முதலில் சுத்தம் செய்து பிறகு இம்மருந்தை தடவினால் விரைவில் குணமுண்டாகும்.

# கைவண்ணங்கள்!

## BODY LOTION

சருமத்திலுள்ள உயிரணுக்களுக்குத் தேவையான வைட்டமின்கள், கனிமங்கள் மற்றும் மூலிகை எண்ணெயை இந்த லோஷன் அளிக்கிறது. இதனால் மேனி மினுமினுப்பாகவும் ஈரப்பதமாகவும் இருக்கிறது. பாக்டீரியா மற்றும் ஃபங்கஸ் ஆகியவை தோலில் பரவாமல் பாதுகாக்கிறது. வெட்டுக்காயங்கள் மற்றும் தழும்புகளை நீக்குகிறது. தோலின் பளபளப்பை மேலும் அதிகரிக்கச் செய்கிறது.










## இதுவும் உண்டு!

யாரும் எதிர்பாராததும் கிடைக்கிறது. அது விபூதி, குங்குமம். ஆலயங்களில் செய்யப்படும் வேள்வியின் சாம்பலிருந்து அக்காலத்தில் விபூதி புனிதமாக தயாரிக்கப் பட்டது. ஹோமம், அது நடத்தப்படும் இடத்தை பரிசுத்தமாக்கும் என்பது நம்பிக்கை. இதற்குக் காரணம் மருத்துவப் பலன் உள்ள பொருள்களை தீயில் சமர்ப்பணம் செய்வதுதான்.

டீம் நிறுவனம் இதே அடிப்படையில் விபூதியைத் தயாரிக்கிறது. காய்ந்த மாட்டுச் சாணத்துடன் மருத்துவப் பொருட்கள் கலந்து அளிக்கப்படுகின்றன. அதிலிருந்து கிடைக்கும் சாம்பல் விபூதியாக பேக் செய்யப்படுகிறது.

ஹோமங்களில் 'சமித்'துகளாகப் (சிறு குச்சிகள்) பயன்பட்ட வேம்பு, அரசமரம், வில்வமரக்குச்சிகள், துளசி, அருகம்புல், வேப்பிலை, பால், தேன், நெய் இவற்றோடு வாசனைக்காக மல்லிகை மற்றும் காய்கறி மெழுகுகளும் சேர்க்கப்படுகின்றன.

# எண்ணெய்

பொதுவாக சுத்திகரிக்கப்பட்ட எண்ணெய் அதாவது 'ரிஃபைன்ட் ஆயில்' என்பதில் எண்ணெய் சுமார் 450 டிகிரி சென்டிகிரேடுக்கு வெப்பப்படுத்தி ரசாயன பொருட்கள் கலக்குவார்கள். ஆனால் டீம் எண்ணெயின் சத்துக்கள் அப்படியே வைத்துக் கொள்ளப்படுகின்றன. இதில் சூடுபடுத்தும் செயலோ ரசாயனப் பொருட்களை கலப்பதோ அறவே இல்லை.




## உள்ளே...

மரபுவழியில் செக்கில் ஆட்டி எடுக்கப்பட்ட எண்ணெய் வகைகளும் (குளிர்நிலை செயல்முறையில்) ஃப்ரஷ்ஷாக பேக் செய்து விற்கப்படுகிறது.

**பயன்கள் :**

- நார்ச்சத்தும் தாதுப் பொருட்களும் நீக்கப்படாமல் உள்ளன. இதனால் ரத்த அழுத்தம் கட்டுக்குள் இருக்கிறது.
- ரத்த ஓட்டத்தை தூண்டுகிறது.
- நல்ல கொலஸ்ட்ரால் அதிகமாகி, தீய கொலஸ்டரால் குறைகிறது.
- மூட்டுகள் சிக்கல்களின்றி எளிதாக இயங்குகின்றன
- மேனி மென்மையாகவும் மிருதுவாகவும் இருக்கிறது.
- கண்ணுக்குக் கீழே தொங்கும் 'பை'கள் நீக்கப்படுகின்றன.
- வெட்டுக்காயங்கள், சிராய்ப்புகள் போன்றவை சீக்கிரம் குணமடைகின்றன.
- புற ஊதாக் கதிர்களிலிருந்து மிகச் சிறந்த பாதுகாப்பு கிடைக்கிறது.
- குழந்தையின் உடலுக்கும் மிக ஏற்றது.

## HAIR OIL & ANTI HAIR LOSS OIL

## வெளியே...

வழிவழியாக வந்த சில நல்ல மதிப்பீடுகளை மனத்தில் கொண்டு உருவாக்கப்பட்டவை இவை. துளசி, வைட்டமின் ஈ போன்றவற்றுடன் இயற்கையாகவே கூந்தலைக் கருப்பாக்கும் சில சாறுகளும் சேர்த்து இவை உருவாக்கப்பட்டுள்ளன. முடியின் வேரைத் தூண்டக் கூடியவை இவை. ஜெரேனியம், தேயிலை மர எண்ணெய் ஆகியவை நறுமணத்துக்காக சேர்க்கப்படுகின்றன. இந்த ஆலோ எண்ணெய் வகைகள் முடிக்கு அதிக பாதுகாப்பு அளிக்கின்றன. முடி உதிர்தல் மற்றும் பொடுகு உண்டாவதை இவை தடுக்கின்றன. இவற்றில் கலக்கப்படும் வேப்பிலைச் சத்து தீமை விளைவிக்கக் கூடிய நுண்ணுயிரிகளின்






வளர்ச்சியைத் தடுக்கிறது.

இவற்றைத் தொடர்ந்து பயன்படுத்துவதன் மூலம் கூந்தல் பளபளப்பு அடையும்.

ஷாப்பிங்




### SHAMPOO & SHIKAI

வழக்கமான ஷாம்பூ தயாரிப்பில் எண்ணெயில் (பெரும்பாலும் தேங்காய் எண்ணெய்) வீரிய மிக்க காரப் பொருள் சேர்க்கப்படும். இப்படிச் சேர்ப்பதன் மூலம் சோப்பு மற்றும் கிளிசரின் உருவாகும்.

ஆலோ ஷாம்பூவில் **'Water Aloe Gel'** பயன்படுத்தப்படுகிறது. இது இயற்கை யாகவே ஈரப்பதத்தை அளிக்கிறது. நுரை வருவதற்காக எந்தப் பொருளும் சேர்க் கப்படுவது இல்லை. ஆலோ ஷாம்பூ மற்றும் சியக்காயை பயன்படுத்துவதன் மூலம் தலைப் பகுதிக்கு தேவையான ஈரப்பதத்தைப் பெறுவதுடன் தலைமயிர் உதிர்வது குறைந்து, முடி வளருவது அதிகமாகிறது. முடியின் வேர்கள் வலிமை பெறுவதற்கு உதவும் இந்தப் பொருள் பொடுகுக்கு எதிராகவும் போரிடுகிறது.

# ...மின் கைவண்ணங்கள்!

### MOISTURISING CREAM

கை, கால் மற்றும் சூரிய வெப்பம் நேராக படக்கூடிய பகுதிகளில் இதை தடவிக் கொள்ள வேண்டும். இரு விதங்களில் இது செயல்படுகிறது. ஒன்று, தோலை ஈரப்பதத்துடன் வைக்கிறது. இரண்டு, புற ஊதாக்கதிர்களி லிருந்து தோலைப் பாதுகாக்கிறது. இதில் உள்ள சிறப்பு மூலிகைகள் காரணமாக ஆண்டிசெப்டிக் போல வும் பலன் அளிக்கிறது. ஒப்பனைக்கு அடித்தளமாகவும் இதைப் பயன் படுத்திக் கொள்ளலாம்.



## ஷாப்பிங்




### FACIAL SCRUB

தோலின் துவாரங்களில் உள்ள அழுக்குகள் சுத்தம் செய்யப்படுகின்றன. முகங்களில் உள்ள வெள்ளை மற்றும் கருப்பு புள்ளிகள் நீங்குகின்றன.

இதை அடிக்கடி பயன்படுத்த வேண்டிய அவசியம் இல்லை. வாரம் ஒருமுறை பயன்படுத்தினால் போதும். முகத்தின் கீழ்புறத்திலிருந்து மேல்புறமாக ஆலோ ஜெல்லினால் மசாஜ் விட்டு, சுத்தமான நீரினால் முகத்தை கழுவ வேண்டும். பிறகு ஸ்க்ரப் செய்யலாம்.

### NATURA SHAPES - HERBAL AID

ஆலோ ஜெல்லிலிருந்து பெறப்படும் அடர்த்தியான ஒரு க்ரீம்தான் 'ஹெர்பல் எய்ட்'. ஆயுர்வேத அடிப்படையில் சில சத்துக்கள் இதில் சேர்க்கப்பட்டுள்ளன. இதைப் பயன்படுவதால் தலைமுடி, முகம் மற்றும் தோலுக்குப் பல ஆரோக்கியமான பலன்கள் உண்டு.

### MOUTHWASH

பாக்டீரியா வளர்ச்சியை கட்டுப்படுத்துகிறது. மூச்சுக்கு புத்துணர்வு அளிக்கிறது. துர்நாற்றத்தை மறைக்கிறது. நீரிழிவு நோய்க்காரர்கள், உயர் ரத்த அழுத்தம், அலர்ஜி, வாய்ப்புண் ஆகியவற்றால் அவதிப்படுபவர்களுக்கு இது பலனளிக்கும்.

உணவுக்குப் பிறகு இதைத் தவறாமல் உபயோகித்தால் பலன் சிறப்பாக இருக்கும்.




டமின் ன



### STRETCHNIL

பிரவசத்துக்குப் பிறகு அல்லது திடீர் என்று எடை குறைந்தால் உடலின் சில பகுதிகளில் தோல் தனது எலாஸ்டிக் தன்மையை இழந்து, ஸ்ட்ரெச் மார்க் ஏற்படும். ஆலோ ஸ்ட்ரெச்னில் பயன்படுத்துவதன் மூலம் இதைப் போக்கலாம்.

இதில் அடங்கியுள்ள சோற்றுக்கற்றாழை மற்றும் இதர மூலிகை திசுக்கள் விரைவில் குணமடைய உதவுகின்றன. இது ஆன்ட்டி-ஆக்ஸிடெண்டுகளை கொண்டுள்ளதால் தோல் தன்னைப் புதுப்பித்துக் கொள்ள முடிகிறது. மேலும் இதில் அடங்கியுள்ள wheat germ oil, வைட்டமின்-ஈ அதிகம் கொண்டுள்ளதால், தழும்புகள் விரைவாக மறைகின்றன.




# ...கவண்ணங்கள்!




### LIP CARE

உதடுகள் உலர்வது, வெடிப்பு ஏற்படுவதை தவிர்க்கலாம். சூரியன், கடும்காற்று போன்றவற்றிலிருந்து இது பாதுகாப்பு அளிக்கிறது. ஏற்கெனவே உங்கள் உதடுகள் ஆங்கங்கே உரிய தொடங்கி இருந்தாலோ, எரியும் உணர்வு அல்லது அரிக்கும் உணர்வு ஏற்பட்டிருந்தாலோ அவற்றைப் போக்க இது உதவும். பிறகென்ன ஆரோக்கியமான புன்னகைதான்!

### SKIN BRIGHTNER

சிகப்பழகு கீரிம்களில் பெரும்பாலானவற்றில் ப்ளீச் செய்யும் பொருட்களைப் பயன்படுத்துகிறார்கள். சூரிய வெளிச்சம் படும்போது இவைதோலின் உயிரணுக்களை பாதிக்கக்கூடும். ஆனால் ஆலோ ஸ்கின் ப்ரைட்னர் இயற்கையான முறையில் தோலைப் பாதுகாக்கிறது.



வாட்டர்



★ ★ ★

**மினரல் வாட்டரின் முன்னோடி**

ஏழைகளுக்கும் பயன்படும் வகையில் சாஷே எனப்படும் சிறு பாக்கெட்டுகளில் வடிகட்டிய நன்னீரை வழங்கும் உத்தியை முதன்முதலாக அறிமுகப்படுத்தியது டீம் நிறுவனம்தான்! முக்கியமாக, ரயில்வே துறை, தன் பயணிகளுக்கு உணவோடு வழங்க இந்த சாஷேக்கள் மிகவும் பயன்பட்டன.

★ ★ ★

# தண்ணீர்

**டீம் நிறுவனத்தினர் 'ஆல்கலைன் வாட்டர்'' என்பதை சிங்கப்பூரிலும், ''ஹெர்பல் வாட்டர்' என்பதை இந்தியாவிலும் அறிமுகப்படுத்தியுள்ளனர்.**

சிறுநீரக நோய் சிகிச்சை மருத்துவரான டாக்டர் ரவிச்சந்திரன் இது தொடர்பாக அளித்த விளக்கம்.

"ஆல்கலைன் வாட்டர் எனப்படுவது நம் உடல் நலத்துக்கு மிகவும் ஏற்றது என்று அறிவியல் கூறுகிறது. நீர் என்பது அமிலமும் அல்ல. காரப்பொருள் எனப்படும் ஆல்கலியும் அல்ல. நீரில் உள்ள ஹைட்ரஜன் அயனியின் அளவை pH என்று குறிப்பிடுவது வழக்கம். தண்ணீரின் pH 7. இதைவிடக் குறைவான அளவு இருந்தால் அந்த நீருக்கு அமிலத் தன்மை வந்துவிடும். உட்கார்ந்த இடத்திலேயே நீண்ட நேரம் வேலை செய்வதால் உடற்பயிற்சியின்மை, மன இறுக்கம் இப்படிப் பல காரணங்களினால் உடலில் உள்ள அமிலத்தன்மை அதிகமாகிறது. இந்த நிலையில் ஆல்கலைன் நீரை டீம் நிறுவனத்தினர் அறிமுகப்படுத்தி இருப்பது சந்தோஷமான விஷயம்தான். இதன் pH 9.5 என்று அறிகிறேன்.

ஆல்கலைன் நீர் என்ற பெயரில் அனுமதி தர நம் அரசுக்கு ஏதோ தயக்கம் இருந்திருக்க வேண்டும். அதனால் 'மூலிகை நீர்' (Herbal Water) என்ற பெயரில் அதை இங்கு விற்பனை செய்கிறார்கள்.

மத்திய அரசு அங்கீகாரம் அளித்த சென்னை பல்கலைக்கழக உயிரியல் தொழில் நுட்பத்துறையின் சார்பாக சில ஆராய்ச்சிகளை செய்தோம். இதன் ஒரு பகுதியாக புற்றுநோயின் ஆரம்ப கட்டத்திலுள்ள சில திசுக்களை ஆராய்ச்சிக்கு உட்படுத்தினோம். அந்தத் திசுக்





★ ★ ★

## அதென்ன ஆல்கலைன் வாட்டர்?

"ஆல்கலைன் நீர் உடலிலுள்ள தேவையற்ற அமிலக் கழிவுகளிலுள்ள விஷத்தன்மையை நீக்குகிறது. இந்த அமிலக் கழிவுகளை அப்படியே விட்டுவிட்டால் அது எலும்புகளில் உள்ள கால்ஷியத்தை உறிஞ்சி விடக் கூடும். வயிற்றினுள் கொழுப்புப் படலங்களை உருவாக்கும். மேலும் ஆல்கலைன் நீரில் சார்ஜ் செய்யப்பட்ட எலெக்ட்ரான்கள் இருப்பதால் அதை அருந்தியவர்கள் மேலும் சுறுசுறுப்பாக இருக்க முடியும்" என்கிறார் டீம் நிறுவனத் தலைவர் டாக்டர் கிருஷ்ணமூர்த்தி ராவ் அவர்கள்.

★ ★ ★

# நன்னீர்!

களின் ஒரு பகுதியை அமிலத்தன்மை உள்ள தண்ணீருக்கு உட்படுத்தினோம். அப்போது அந்த திசுக்களில் உள்ள புற்று நோய் வேகமாக உடலின் பிற பகுதிகளுக்கும் பரவியது. அமிலத்தன்மை சேர்க்கப்படாத திசுக்களில் புற்றுநோய் அப்படி வேகமாகப் பரவவில்லை. இந்த உண்மையைத்தான் பரிசோதனைச் சாலை என்கிற அளவில் கண்டுபிடித்திருக்கிறோம். புற்றுநோயின் ஆரம்ப கட்டத்தில் உள்ள மனிதர்களிடம் பரவலாக ஆராய்ச்சி செய்து பார்த்த பிறகுதான் இது அதிகாரபூர்வமாக உறுதியாகும்.

பொதுவாகவே அமில அளவு அதிகமானால் நமது வயிறு மற்றும் சிறுநீரகங்கள் பாதிக்கப்படும் வாய்ப்புகள் அதிகம்.

இந்தக் கோணத்தில் பார்த்தால் டீம் நிறுவனத்தின் ஹெர்பல் நீர் பாதுகாப்பானது. இதன் மறு வடிவமான 'ஆல்கலைன் நீர்' சிங்கப்பூர் அரசினால் 'ஹெல்தி சாய்ஸ்' என அறிவிக்கப்பட்டுள்ளது பெரும் அங்கீகாரம். ●

ஷாப்பிங்




## FACIAL GEL

சோற்றுக்கற்றாழை உட்பட பலவித இயற்கை மூலிகைகள் அடங்கிய டைம் நிறுவனத்தின் ஃபேஷியல் ஜெல் முகத்தின் ரத்த ஓட்டத்தை அதிகரிக்கிறது. முகத்தில் தோல் எங்காவது வெடித்திருந்தால் அது ஆறுவதை விரைவுபடுத்துகிறது. களைத்துப்போன முகத்தசைகளுக்கு இதமான ஓய்வும் புத்துணர்ச்சியும் அளிக்கிறது.

இதை முகத்தில் தடவிக் கொண்டு அது உலரும் வரை (சுமார் 1 மணி நேரம்) வைத்திருந்து, பிறகு தண்ணீரால் நன்கு கழுவிவிட வேண்டும்.

டைமின்

## FOOT CREAM

சோற்றுக்கற்றாழை, துளசி, வேம்பு, மஞ்சள் போன்றவை இதில் அடங்கி இருப்பதால் பாதங்களின் கீழ்ப் பகுதிகளில் - முக்கியமாக குதிகால் பகுதியில் இதை தடவினால் சிறப்பான பயன்கள் இருக்கும். பாதத்தை ஈரப்பதத்துடன் வைத்திருக்க இது உதவுகிறது. பாதத்தில் வெடிப்பும் தொற்றுக் கிருமிகளின் பாதிப்பும் ஏற்படாமல் இருக்க இது உதவுகிறது. ஆணி, காளான் தொற்று போன்றவற்றை நீக்குவதுடன் உங்கள் பாதத்தை இது மிருதுவாகவும் ஆக்குகிறது.










## MULTIPURPOSE GEL

'மல்டி பர்ப்பஸ் ஜெல்'. இதில் அப்படி பெரிய பலன்கள் இருக்கிறதா?

உண்டு!

இது இயற்கையாகவே ஈரப்பதத்தை அளிக்கிறது. உடல் மற்றும் காலில் ஏற்பட்டிருக்க கூடிய வெடிப்புகளை மிருதுவாக்குகிறது. உங்கள் சருமத்தை இளமையுடனும், மிருதுவாகவும் வைக்கிறது. குழந்தைகளுக்கு நேப்பி அணிவிப்பதால் அந்தப் பகுதி சில சமயம் சிவந்து போகக் கூடும். அந்தப் பகுதிகளில் இந்த ஜெல்லைத் தவினால் பலனளிக்கும்.

# கைவண்ணங்கள்!

## தேனே! தேனே!!

**கா**ஷ்மீரில் உள்ள பசுமையான அரிதான மலர்களில் இருந்து எடுக்கப் பட்ட தேன் இது. ஆயுர்வேத மருத்துவம் மற்றும் நவீன தொழில் நுட்பம் ஆகிய இரண்டையும் கொண்ட அற்புதமான கலவை இது. அஸ்வகந்தா, துளசி, இஞ்சி, வேம்பு, எலுமிச்சை, ரோஜா, வனிலா, ஸ்ட்ரா பெரி மற்றும் குங்குமப்பூ வாசனைகளிலும் கிடைக் கிறது.

வாசனைக்கு மட்டுமின்றி இந்தப் பொருட்கள் வேறு விதங்களிலும் உதவு கின்றன. எப்படி என்று பார்ப்போம்.




### குங்குமப் பூ

மத்திய நரம்பு மண்ட லத்தை தூண்டுகிறது.

### துளசி

நோய் எதிர்ப்பு சக்தியை அதிகரிக் கிறது. ஜீரண மண்டலத் தைச் சீர் செய்கிறது.

### நெல்லிக்காய்

இரும்பு மற்றும் வைட்ட மின்-சி சத்து கிடைக்கிறது.

### வேம்பு

ரத்தத்தை அற்புதமாக சுத்திகரிக்கிறது. தோல் நோய்களுக்கு எதிராக செயல்படுகிறது.

### அஸ்வகந்தா

உடலை இயல்பு நிலைக்கு மீளவைக்கும் சக்தியைக் கொடுக்கிறது.

# மக்கள் தீர்ப்பு



# எங்கள் சாய்ஸ்!

## நிவாரணம் கிடைத்தது!

திருவான்மியூரில் வசிக்கும் ஓர் ஆடிட்டர் இப்படி ஒரு கடிதத்தை எழுதியுள்ளார். 'சில மாதங்களுக்கு முன் எனக்கு irritable bowel syndrome என்ற பாதிப்பு இருப்பது கண்டு பிடிக்கப்பட்டது. இதற்காக ஆங்கில மற்றும் ஆயுர்வேத சிகிச்சை மேற் கொண்டேன். அதே சமயத்தில் உங்கள் நிறுவனத்தின் மூலிகை நீரையும் உட்கொள்ளத் தொடங்கினேன். இதன் மூலம் எனக்கு நிவாரணம் கிடைத்து இருக்கிறது. நான் இப்போது உங்கள் மூலிகை நீரைத் தொடர்ந்து பயன் படுத்துகிறேன். அதன் தரமும் சுவையும் மிகுந்த மகிழ்ச்சியை அளிக்கின்றன.''

## பிரச்னை தீர்ந்தது!

ஆழ்வார்ப்பேட்டையைச் சேர்ந்த ஒரு பெண்மணி 'உங்கள் ஆலோ வீரா சாறு என் சைனஸ் பிரச்னையைத் தீர்ப்பதில் மிகுந்த உதவிகரமாக இருக்கிறது. இதனால் என் தலைவலி குறைந்து உள்ளது' என்கிறார்.

## மகத்துவம் புரிந்தது!

'உங்கள் மூலிகை நீரை சில வாரங் களாக குடிக்கிறேன். பல வருடங்களா கவே நான் 'hyper acidity'யால் அவதிப்படு கிறேன். ஆனால் உங்கள் மூலிகை நீரை அருந்தத் தொடங்கிய பிறகு இந்த அவதி எனக்கு இல்லை. எனக்குத் தெரிந்தவர்களிடம் உங்கள் மூலிகை நீரின் மகத்துவத் தைப் பரப்பிக் கொண்டிருக் கிறேன்'' என்கிறார் சென்னை கீழ்ப்பாக்கத்தில் இருக்கும் ஒருவர்.

**டீம் நிறுவனத்தின் தரத்திற்கு மக்கள் அளித்த சான்றிதழ்களில் சில துளிகள்**

• விருது பெறும் டாக்டர் திரு ராவ்



# உப்பு

அதிக ரத்தக் கொதிப்பு என்றால் உணவில் எதைக் குறைவாகச் சேர்த்துக் கொள்ள வேண்டும்?

'உப்பு' என்பது யாருக்குத்தான் தெரியாது.

உண்மையில் ஒட்டுமொத்த உப்பும் குற்றவாளியல்ல. அதில் உள்ள சோடியம்தான் உடலில் பல விபரீதங்களை உண்டு பண்ணுகின்றன. ஓரளவு சோடியம் உடலுக்குத் தேவை என்றாலும் நம் தேவையைப் போல ஆறு மடங்கு உப்பை உணவில் சேர்த்துக் கொள்கிறோம். சொல்லப் போனால் நாக்கில் உள்ள சுவை அரும்புகளைச் செயலற்றுப் போகச் செய்யக் கூடியது சோடியம்.

இப்பிரச்னையைத் தீர்க்க நோனா (Nona) என்ற உப்பை அறிமுகப்படுத்தியுள்ளது டீம் நிறுவனம். அதென்ன நோனா? புதுமைக்காகச் சூட்டிய பெயரா? அல்ல, காரணப் பெயர். Na என்பது வேதியியலில் சோடியத்தைக் குறிக்கிறது. சோடியத்திற்கு No சொல்வதால் இதன் பெயர் நோNa.

சோடியத்திற்குப் பதிலாக இந்த உப்பில் கால்சியம், மெக்னீசியம், பொட்டாசியம் போன்ற தாதுப் பொருட்கள் உள்ளன. இதை சமையலில் சேர்த்துக் கொள்வதால் உடலில் உள்ள சோடியம் அளவு குறைந்து தேவைப்படும் கனிமங்களின் அளவு அதிகமாகிறது.

அதே சமயம் சோடியத்தின் சுவைக்கு அடிமையானவர்களுக்கு ஓரளவு ஆறுதல் அளிக்கும் விதத்தில் **'டீம் ஹாஃப் சால்ட்'** எனும் உப்பு வகையையும் அறிமுகப்படுத்தி இருக் கிறது. இந்த உப்பில் வழக்கத்தைவிட பாதி சோடியம்தான் இருக்கும்.

## 'நோனா' இட்டவரை நாவுள்ளவரை நினை!

### தெரியுமா?

ஒரு காலத்தில் உப்பு உயிரற்ற உடல்களைப் பாதுகாக்கத்தான் பயன்பட்டது. பிறகு மற்ற பொருட்கள் கெட்டுப் போகாமல் இருக்க உப்பு பயன்படுத்தப்பட்டது. ஆனால் இதன் சுவை காரணமாக மெள்ள மெள்ள சமையலில் நுழைந்து நிற்கிறது.





சக்ஸஸ் ஸ்டோரி














# மேலும் சில...



## அழகு...
## ஆரோக்யம்...
## டீம்!

தொகுப்பு: ஆதர்ஷ்



# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

29.4.07

இதுமுடன் இணைப்பு

16 பக்கங்கள்

+16

# அழகு... ஆரோக்யம்... மலம்!






# மூலிகைகளின் அரசன்!

சோற்றுக் கற்றாழை என்பது ஓர் அற்புதமான இயற்கை மூலிகை. இது இப்போது ஆங்கில மருத்துவத்திலும் முக்கியப் பங்காற்றுகிறது. 'அதிசய தாவரம்' என்று அழைக்கப்படும் இது பண்டைய கிரேக்க, ரோமானிய, எகிப்திய நாகரிகங்களின் காலத்திலேயே இதன் மருத்துவ குணங்கள் கண்டறியப்பட்டுள்ளன. வைட்டமின்கள், தாதுப் பொருட்கள், அமினோ அமிலங்கள், என்சைம்கள் - இப்படி எழுபத்தைந்துக்கும் மேற்பட்ட அற்புத சத்துக்கள் உள்ள இது மூலிகைகளின் அரசன் என்று அழைக்கப்படுகிறது.

''டீம் ஆலோ சாறு என்பது முற்றிய கற்றாழை இழைகளிலிருந்து எடுக்கப்பட்டது. குளிர்நிலை செயல் முறையில் ('கோல்டு பிராஸஸிங்') சாறு எடுக்கப்படுவதால் இதில் எல்லா முக்கிய சத்துக்களும் கிடைக்கிறது. இதில் தண்ணீரோ, வண்ணச் சாயங்களோ, வாசனைப் பொருட்களோ கலக்கப்படுவதில்லை என்பதும் கூடுதல் விசேஷம்.



# நறுமணம்... பாதுகாப்பு..!

**‘ஆலோ கேர் பயோ க்ளீன்சர் சோப்’** இயந்திரங்களின்றி, கைகளால் செய்யப்படுகிறது. மருத்துவ குணம் கொண்ட இயற்கை நறுமணங்கள் மட்டுமே சேர்க்கப்படுகின்றன. இதுஅதிக க்ளிசரினை கொண்டுள்ளது. இந்த சோப்பில் உள்ள வேப்பெண்ணெய் பாக்டீரியாவை அழிப்பதில் திறமை கொண்டதாக இருக்கிறது.

வழக்கமான சோப்புகளில் ரசாயனப் பொருட்கள் வியர்வை சுரப்பிகளை பாதிப்பதன் காரணமாக தோல் உலர்ந்து போகக் கூடும். அவற்றில் நுரைக்காக சேர்க்கப்படும் SLES மற்றும் SLS ஆகியவை தோலை பாதிக்க வாய்ப்புண்டு. முக்கியமாக குழந்தைகளின் தோலை.

ஆலோ கேர் பயோ க்ளீன்சரில் நுரைக்காக எந்தப் பொருட்களும் சேர்க்கப்படுவ தில்லை. எனவே குழந்தைகளின் உடலுக்கும் இது பாதுகாப்பானதாகவே இருக்கிறது.

தொடர்ந்து பயன்படுத்தும் போது வழக்கமான சோப் தன் வடிவத்தை இழக்கிறது. சுமார் இருபது கிராம் சோப் வீணாகிறது. ஆனால் ஆலோ கேர் பயோ க்ளீன்சர் சோப் மிருதுவாக, தன் வடிவத்தை இழக்காமல் இருக்கிறது.



Registered with the Registrar of Newspaper of India under No.1041/57*Registered No.TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under
PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka. Supplement to the Kalki Issue Dated 29.4.2007

# Team Health Shoppe
For Wellness



குளிர்முறை தொழில்நுட்பம். தண்ணீருக்கு பதிலாக ஆலோ வீரா ஜெல். உடலிற்கு ஒவ்வாத ரசாயனங்களோ, இதர பொருட்களோ இல்லாதது தேங்காய் பால் மற்றும் ஆலோ வீராவினை கொண்டு தயாரிக்கப்பட்டதால் இயற்கையான Moisturiser மற்றும் க்ளீன்ஸர் - சருமத்தை மென்மையாக வைத்துக் கொள்ள உதவுகிறது.

ஆரோக்கியமான குடும்பங்களிற்கு... ரசாயனங்களில்லாத குளிர் முறை தொழில்நுட்பம் இயற்கையிலேயே உள்ள சத்துப் பொருட்கள் மற்றும் வாசனைகளின் தன்மை மாறாமல் பாதுகாக்கிறது.

Healthy Alternative to regular soap

ALOE VERA JUICE
An edge over the rest

TEAM CHEKKU SESAME OIL & COCONUT OIL

Beauty Care The Natural Way
TEAM BEAUTY PRODUCTS

பயனுள்ள உட்பொருட்களை குளிர்முறை தொழில்நுட்பத்தினால் பாதுகாத்து அளிக்கிறது. முதிர்ந்த இலையின் கூழ்ளாலான அசல் சாறு. தண்ணீர் மற்றும் சுவை / வண்ண சேர்க்கை இல்லாதது. பறிக்கப்பட்ட சில மணி நேரங்களிலேயே 100% சீர்படுத்தப்படுகிறது.

- Aloe Care Facial Gel
- Aloe Multi-purpose Gel
- Aloe Care Fairness Oil
- Moisturising Cream

உடலிற்கு உகந்த எண்ணெய் வகைகளுடன் சேர்க்கப்பட்ட ஆலோ வீரா இயற்கையான ஈரப்பதனி மற்றும் க்ளீன்ஸர் - சருமத்தை மென்மையாக வைத்துக் கொள்ள உதவுகிறது.

## ஆரோக்கியம் இயற்கையான வழியில்...



வருமுன் காப்பது நியதி என்பது ஆன்றோர் வாக்கு. நாம் உண்ணும் உணவு, பருகும் பானங்கள் மற்றும் சுவாசிக்கும் காற்றை இயற்கையோடு ஒன்றும் விதமாக அமைத்துக் கொண்டால், இன்றைய நவீன யுகத்தின் பல நோய்களை தடுக்க முடியும். மக்கள் உடல் நலம் காக்கவே தனது பல்வகையான தயாரிப்புகளை டீம் ஹெல்த் ஷாப்பி வழங்குகிறது.

## டீம் ஹெல்த் ஷாப்பின் இதர பொருட்கள்

- டீம் சோடியம் அல்லாத உப்பு
- டீம் அரை உப்பு
- டீம் நல்லெண்ணெய்
- டீம் தேங்காய் எண்ணெய்
- கற்றாழை - சருமம் மற்றும் மேனிப் பராமரிப்பு பொருட்கள்
- தேன் பொருட்கள்
- டீம் எனர்ஜி வாட்டர்
- மரபு முறை, கைகுத்தல் உணவுப் பொருட்கள்
- கொடைக்கானல் மலை தைலம்
- பனைப்பொருட்கள்







NEW
Now Available
- FLAXSEED OIL
- FLAXSEED POWDER
- ORGANIC PULSES




## Team Eubio Care
(DIVISION OF CHEMFAB ALKALIS LIMITED)




**வண்டலூர்:** டீம் ஹவுஸ், ஜி.எஸ்.டி. ரோடு, சென்னை - 48. போன்: 2275 0502

**அண்ணாநகர்:** பிளாட் 1200, Z பிளாக், 6வது அவென்யு, சென்னை - 40. (கோகிலோ கராத்தே ஸ்கூல் எதிர்புறம்) போன்: 4269 3332

**அடையார்:** எண்.26, தரைதளம், கார்பரேஷன் ஷாப்பிங் காம்ப்ளக்ஸ், 3வது அவென்யு, இந்திரா நகர், சென்னை - 20. போன்: 4269 5115

E-mail : teamhealthshoppe@drraoholdings.com • Web : www.teamhealthshoppe.com

# AFMC - 08/09

## இராணுவ மருத்துவக் கல்லூரியில் இலவசமாக MBBS பயில Regular cum Postal / e-classes.

+1, +2 பயிலப்போகும் மாணவ, மாணவிகளே!

நீங்கள் +2-க்குப் பின் இராணுவ மருத்துவக் கல்லூரியில் இலவசமாக MBBS பயில விருப்பமா? நாளை முதல் ஒரு மாதத்திற்கு Direct Classes ஆரம்பம். வருடம் முழுவதும் பாடங்கள் Postal மற்றும் e-classes-ல் நடைபெறும். +2 தேர்விற்குப் பின் இராணுவக் கல்லூரியில் சேரும் வரை வகுப்புகள் உண்டு.

இராணுவக் கல்லூரியில் பயில்வதற்கென்றே தமிழகத்தில் மட்டுமின்றி தென்னிந்தியாவிலேயே முதன்முதலாக ஆரம்பித்த எம் பள்ளியில் இன்று 1 ஆண்டு / 2 ஆண்டுகள் பயிற்சி மட்டுமே நடைபெறும். இது நீங்கள் வெற்றி பெற வேண்டுமென்பதற்காகவே நடைபெறும் பள்ளி. +2-ல் PHYSICS, CHEMISTRY, BIOLOGY-ல் 50% மதிப்பெண்கள் பெற்றவர்கள் கூட சரியான நிறுவனத்தில் பயிற்சி எடுத்தால் AFMC தேர்வில் வெற்றி பெற்றுவிடலாம். ஆனால் 1190/1200 மதிப்பெண்கள் பெற்றவர்கள் சரியான நிறுவனத்தில் பயிற்சி எடுக்காவிட்டால் தோல்வியடையக் கூடும். கடைசி நேரத்தில் 40 நாட்கள், 30 நாட்கள் என பயிற்சி எடுத்துத் தோல்வியடைவதைவிட ஓர் ஆண்டு பயிற்சி / இரு ஆண்டுகள் பயிற்சி வெற்றி பெறச் செய்யும். தென்னிந்தியாவிலேயே எங்களிடம் மட்டுமே இராணுவக் கல்லூரியில் சேர்க்கைக்குரிய இரண்டு விதப் பயிற்சிகளும் உண்டு. ஆகையால் Entrance Exam + Physical Fitness இரண்டிலும் வெற்றி பெற்றவர்கள் மட்டுமே எங்களது பயிற்சி வகுப்பில் சேர்த்துக் கொள்ளப்படுவீர்கள்.

மேலும் விவரங்களுக்கு நேரில் மட்டும் வரவும்.

www.afmcexams.com e-mail:info@afmcexams.com

**HOLY ANGEL'S ONLINE EXAM**

**11/20. தக்குதீன் கான் தெரு. ஆதம்ஸ் மார்க்கெட் எதிரில். திருவல்லிக்கேணி. சென்னை - 5**

**CELL: 9360313921**

குறிப்பு: **AFMC-08/09 தேர்விற்கு Previous Years' 10,000+ Questions, Answers and Explanations and also CHAPTERWISE Previous Years' Questions-Answers and Explanations are available.**

**NDA, ARMY, B.E., B.Tech., B.Sc. Nursing also applicable.**

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57 Registered No.TN/CC(S)DN/144/06-08 Licensed to post without prepayment under PMG s Licence No.WPP TN/CC(S)DN/70/06-08 Registered as a Newspaper in Srilanka.

# அதிசயம்! ஆனால் உண்மை!

**இளைஞர்களே ! வழுக்கைத் தலையால்**
**உங்கள் காதல், திருமணம் தடைபட்டுவிட்டதா ?**
**இனி கவலை வேண்டாம் !**



மூன்றே மணி நேரத்தில் இளமையான தோற்றத்தைப்
பெற்று காதல் திருமணத்தில் வெற்றி பெறலாம்

சிறப்புச் சலுகை
**50%**

*Hair Weaving, Hair Bonding &*
*Silicon System Treatments are Done Here !*





**சிறப்பம்சங்கள்**

*வித்தியாசமான முறை*
*பக்க விளைவுகள் அற்றது*
*ஷாம்பு போட்டுக் குளிக்கலாம்*
*நீச்சலும் அடிக்கலாம்*
*அறுவை சிகிச்சை கிடையாது*
*இது விக்கும் அல்ல*
*வாகனங்கள் ஓட்டலாம்*
*நீங்கள் விரும்பும் ஹேர்*
*ஸ்டைலில் தலை வாரலாம்*




# FAIR & HAIR

## HEALTH & BEAAUTY CURE

- 51, Salai Road, Uraiyur, (Near Rockfort School) TRICHY-620 003. Phone : 0431-2768497, 2760545. Mobile : 98424-38381, 94431-38381.
- 17/1, L.B.Road, Adyar, CHENNAI - 600 020. Phone : 24469596, Mobile : 94449-18848
- 128-A, North Marat Street, Yanaikkal, Opp. To Anjeneyar Temple, Simmakkal, MADURAI - 625 001. Phone : 0452-2620567, 2628383. Mobile : 94433-38382